# ஆலயம்

---

உண்மையாய் -இறை வார்த்தையாய், இறைவனோடு
இறைவனாய் இருப்பவர், ஓங்காரநாதமாய் அதிர்பவர்
மானுடத்திற்கு மீட்பளிக்கும் வானமுதாகி, மனுவுருவாகி-
கன்னித்தாயிடம் தொழுவத்தில் பிறந்திருக்க,
தொழுவமும் ஆலயமானது-முழு உலகும் இறைவனை
தொழுது மகிழ்ந்திட இறையில்லமானது

வாழ்வை தேடலாக்கிய மூன்று ஞானப் பயணிகளுக்கும்
வான் நட்சத்திரம் வழிகாட்டிட,, தேவனை தேடிய
புனித யாத்திரையில் வழிதவறிய குருட்டு யாத்திரிகனாய்
" கொடிய ஏரோதின் குறுக்கீடு "

தேடலின் அர்த்தம் புரிந்த ஞானிகள் "தேடிய தேவனை"
தேவதாயுடன் கண்டு மகிழ்ந்தார், தெண்டணிட்டு தொழுது
காணிக்கை செலுத்தி, தொழுவத்தையும் கோயிலாக்கி
இறை வழியில் "வீடு" திரும்பினார்

இறைதூதர் கூறிய "இறையமைதியின் பேரழகை"
இடையரும் கண்டு தொழுது மகிழ்ந்தே
களிப்போடு சென்றார்

இறைவன் வாழுமிடமே ஆலயம்
ஆலயமெல்லாம் -ஆண்டவன் வாழிடமல்ல

எங்கும் நிறைந்தவரை-எல்லாமுமானவர் குடியிருக்க வீடேது?
சூனியத்தை கொள்ள சூனியமும் போதுமோ?
"இருப்பவர் நாமென்பவாரை" தவிர வேறு " வேறு இருப்பேது"

ஆன்மீகப்போலிகளால் கள்ளர் குகையான ஆலயத்தில்
" மனுமகனின்" உருத்திரதாண்டவம்-கள்ளவர் குகையான ஆலயம்,
கல்லின் மேல் கல் இராதபடி இடிக்கப்பட்டு
"அழுகைச் சுவரான" அவலம்

கள்வர் குகையான இறையில்லங்கள் ஆன்ம-லயம் பெறும்
ஆலயங்களாகிட இறைமகனும் "சாட்டை" எடுக்க வேண்டும்
வர்த்தக-உள்ளங்களை புரட்டி போலிச் சாமிகளை விரட்டி
"ஆன்மீகப் புரட்சி" இன்றும் நிகழ்த்தவேண்டும்-உள்ளம் கோயிலாகிட
தனி மனித ஆன்மீகம் மதம் கடந்த புரட்சி மானுடம் அறியவேண்டும்

ஊனுடம்பே ஆலயம்-உண்மையே பரப்பிரம்மம்
அன்பே அதன் தத்துவம்
அர்த்தநாரிஸ்வரமே அதன் இயற்கை

"உண்மையை வாழ்வாக்கி, அன்பைத் தவமாக்கி
வாழ்தலே இறைவழிபாடு-மற்றெல்லாம்-
வெற்றுச் சடங்குகளே, சிலைகளையும்,
சுவர்களையும் நோக்கிய கூக்குரல்களே

'கடவுளும் நாமே" "அரசனும் நாமே"
அகங்காரத்தின் உச்சத்தில் பாரோவின் பிரகடனம்
எரியும் முட்செடியில் சத்தியும் சடமும் ஒன்றாகிட
நிர்க்குணபிரம்மமும் , சகுணபிரம்மமுமாய்
தம்மை வெளிப்படுத்திய இறைவன்

பத்து வல்ல செயல்களால் "கடவுளும் நாமே
அரசனும் நாமே" என்று பாரோனும் அஞ்சிடக் காட்டியவர்
" என்றும் இருப்பவர் நாமே" என்று மோயீசனுக்கு இயம்பியவர்
"கடவுளும் அரசனுமாகி" நிற்கும் "போலி மதங்களிடமிருந்து"
இன்றும் தம் மக்களை மீட்டிட-"மோயீசன்"
உன்னையும் அழைக்கின்றார் "உண்மையின் இறைவன்

உண்மைக்கு செவி கொடு - மானுடா
அகங்காரப் பாதணிகளை கழற்றி
ஆண்டவனைப் பணிந்திட,-அன்பைத் தவமாக்கி
உண்மையை வாழ்வாக்கு

அன்பும், உண்மையும் இறைதன்மை
வாழ்ந்தறியும் உண்மையே இறைவன்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10.07-2023*

# ஆனந்தம்

---

வாழ்வு இறை தந்த பெரு வரம்
நடந்து வந்த பாதையில் பூக்களும் முட்களும்
தந்தையின் அருள் வரம்.

பிறவாமை வேண்டும் -மீண்டும்
பிறப்புண்டேல் நின்னை மறவாமை வேண்டும்.
என் சித்தமன்று எல்லாம் நின் சித்தமென்று
இறைவா-வாழும் நிலை வேண்டும்.

நான் என்று ஏதுமில்லை
எது பிறக்கின்றது? எது மடிகின்றது?
பிறவாதது எதுவோ? அழியாதது அதுவே
அதுவே நாம்

அன்புத் தவமாய் வாழ்வு மாறவேண்டும்
நிலைத்த பேரின்பத்தை அறிய
இறை அன்பு பொங்கவேண்டும்
அமைதி வேண்டும்.
சச்சித்தானந்தமே நாம் உணர்வு வேண்டும்

***சிலுவை சுமையல்ல***
***ஆணவமழியும் ஆனந்த நிலையே.***

அன்பே சிவம்-அதுவே நாம்
வாழ்ந்து அறிந்து இன்புறுங்கள்
வாழ்வு ஒரு சத்தியத் தேடல்
கரி வைரமாகும் அதிசய மாறல்
அன்பூ -பூத்திட மானுடர் மலர்கின்றார்
தெய்வமாய் ஒளிர்கின்றார்.

எங்கும் இறை பிரசன்னம்
அறிந்துணர ஆணவமழிந்த தூய மனம் வேண்டும்
இருமை கடந்த பெருநிலை வேண்டும்.
அஹம் பிரம்மாஸ்மி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-07-2023

# ஆணவம்

---

கோபத்தில் என் விழிப்புணர்வு மங்கி மறைந்திட
ஆணவம் தன் அசிங்க முகத்தை வெளிக் காட்டிட
என் இழி நிலை கண்டு வெறுப்புற்றேன்-மனம் கசந்தே
தூங்கிய நிலைக்காய்த் துன்புற்றேன்

தன்னை அறிதலே விடுதலை
தன்னை மறத்தலோ அடிமை நிலை
மனமழிந்து, தூய மனம் பிறக்க
இறைவனைச் சரணடைந்தே இன்புற்றேன்

மனம் அழிய வாழ்வைத் தியானமாக்கி
சும்மா இருக்க-சுகம் காண நாளும் பயணங்கள்-
பலமுறை தடுக்கி விழ, தூங்கிய அவலங்கள்.

விழிப்புணர்விற்கான யாத்திரை
விடுதலை நோக்கிய தீர்த்த யாத்திரையாக
தேடல் துறந்து, கேட்பதை விடுத்து, தட்டலை தவிர்த்து
சும்மா இருந்தே சுகம் கண்டேன், என்னே இன்பம்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14-06-2023

# ஆண்டவன் கட்டளை

---

எம் மொழியில் வல்ல இறைவன் எழுதினார் பத்து கட்டளைகளை?
நாகரீத்தின் உச்சியில் எகிப்தியர் இருந்தபோதிலும் கைரோகிளிபிக்(hieroglyphic)
மொழிக்கும், நாடோடி யூதர்களின் ஹீபுரு மொழிக்கும் எழுத்துவடிவம் இல்லை

சித்திர உருக்களால் எகிப்தியரின் எழுத்து வடிவம்-
வாய்மொழி மரபாய்-யூதர்களின் ஹீபிரு வடிவம்.
எழுத்து வடிவம் இல்லாக் காலத்தே-பத்துக் கட்டளைகள்
எழுத்துரு பெற்றது என்பதோ ஆச்சரியம்?

எழுதப் படிக்க தெரிந்த ஒரே கல்விமானாய் எகிப்திய முன்னாள்
இளவரசர் மோயீசன்,'இருப்பவர் நாமே என்னும்
இறை பிரசன்னத்தின் பின்' ஏகன் இறைவன் என்று முழங்கி
அநேகன் இறைவன் என்ற எகிப்திய சமூகத்திற்கு
"என் மக்களை போகவிடுங்கள்" சவால் விடுத்த இறை பணியாளன்

இறைவனும், மனிதனும் இணைந்த இஸ்ராயேலரின்
விடுதலைப் போராட்டத்தில், யூதர்களை விடுவித்து வழிநடத்தும்
இறை பணியாளன், இறைவனோடு இணைந்து-புதுப்பித்த
எகிப்திய சட்டங்களாய் இஸ்ராயேலரின் திருச்சட்டங்கள்.?

வரிவடிவம் இல்லாத மொழியில் எழுதிட வாய்பில்லை என்றாலும்
தாயும், மழலையும் பேசிட தரணியில் எங்கும் மொழியில்லை
தாயும் மழலையும் உறவாடும் அழகு, மொழி கடந்த
அன்பின் அதிசயம்! தாயன்பே மொழியாகும் அழகிய நிதரிசனம்

இறையன்பின் அளப்பெரிய வெளிப்பாடு பத்துக் கட்டளைகள்
நேரிய வாழ்வுக்கு ஒளியாய் இறைவனின் அன்புக்கட்டளைகள்
வாய்மொழி மரபே என்பதில் ஐயமில்லை

கட்டளைகளின் ஆழத்திலோ இறையன்பு-பிறரன்பு-
தன்னை நேசிக்கும் அன்பு, இறைவனே நம் தந்தை
நாம் எல்லோரும் சகோதரர்
அன்பில் பிறந்த குடும்பம் நாம் எனும் ஆனந்தம்

வரிவடிவில்லா மொழி தாண்டி
அன்பினால் இறைவன் வகுத்த திருச்சட்டம்
வாழ்வளிக்கும் இறைமொழி-இயேசு
கிறிஸ்துவின் முன் அடையாளம்

கல்லில் எழுதிய எழுத்தாய் கற்பலகையில் அவர் கையெழுத்து
கல்லான மனங்களும் மனம் மாறிட- கல்மனங்களில் உறங்கிடும்
மனச்சான்றை உசுப்பிடும் கட்டளைகளாய் அவர் வாய்மொழி

ஒன்றிணைந்த அன்புச் சமூகமாய் வாழ
இறைவன் வகுத்த அன்புச் சட்டம்-கட்டளைகள்
அன்பே அதன் அடி நாதம்,
புரிந்தவர் வாழ்வடைந்தார்
புரியாதோர் ஆய்விலே மெய்யறிந்தார்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-07-2023

# ஆன்மா

---

உன்னதங்களில்-இறைவனுக்கு மகிமை-
பூவுலகில் நன்மனத்தவருக்கு அமைதி
இயேசு பிறப்பின் நற்செய்தி

உள்ளம் பெரும் கோயில்-ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பெருமானுக்கு வாய் கோபுரவாசல்
தெள்ளத் தெளிந்தாருக்கு சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனனைத்தும் காளாமணி விளக்கே
திரு மந்திரம்

அன்பு மனத்தவருக்கு ஆலயங்கள் எதற்கு?
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
அன்பை மறுத்து-பிரிவினை வளர்க்கும் மதவாதம்
அருவெறுப்பானது-மதமாற்றத்திலும்
மனமாற்றம் உன்னதமானது

மனம் மாறிய அங்குலிமாலா பெருமான் புத்தரின் சீடரானார்.
சக்கேயு-இயேசுவின் நண்பரானார்-அன்பே சிவமாய் நின்றவரே
நானும் தந்தையும் ஒன்றென்றார்-மன்ஸூர் அனல் கக் என்றார்
ஞானி அஹம் பிரம்மஸ்மி என்றார்

மனிதர் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும் என விரும்புகின்றீர்களோ-
நீங்களும் அதை அவர்களுக்குச் செய்யுங்கள்- பொன் விதி வாழ்வானால்
புடமிட்ட பொன்னாகும் மனம், இறையரசு வரமாகும்

தூய மனமே ஆன்மா, அதுவே மெய்யறிவு
அதுவே நாம்-சச்சித் ஆனந்தம் நம் இருப்பு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14-06-2023

# அகக்கிளர்ச்சியே ஆன்மீகம்

ஆன்மீகம் ஒரு தனி மனித இருப்பின் அகக்கிளர்சி
தன்னுள் கடந்து- தன்னை அறிந்திடும் மெய்யறிவு
மனம் கழித்து சூனியமாகும் ஞான நிகழ்வு

இயேசு ஒரு தனி மனித ஆன்மீகக் கிளர்ச்சியாளர்
பண்டைய பண்பாடு, மதக் கலாச்சலார பாரம்பரியங்களை-
திருச்சட்டங்களை அன்பினால் புதுப்பித்து, சொல், செயல்,
சிந்தனையில் புது மெருகேற்றிய புரட்சியாளர்

இஸ்ராயேலரின் தனித்துவ அடையாளமாய் மதமிருக்க
கிளை, இலைகளால் நிறைந்து அலங்காரமாய், சோபனையாய்
வெற்றுச் சடங்குகளால், மிருக பலியால் நாறி
காய்காத அத்தி மரமாய்க் காட்சி தர
ஆணி வேரை அசைத்து, பட்டுப்போகச் சபித்து
பிடுங்கிய இடத்தில் புரட்சி விதைகளை தூவிய மாமனிதன்.
கள்வர் குகையான ஆலயம் கல்லின் மேல்
கல் இராதபடி இடிந்திடச் சபித்த மாமுனிவன்

ஓடுங்கிய வாசல் வழியே தன் சிலுவையை சுமந்த பயணி
கும்பலோடு கும்பலாய் வாழாமல், கோஷங்களுக்கும்,
கைதட்டல்களுக்கும், மாலைகளுக்கும். மணி மூடிக்கும்,
அரியணைக்கும் மண்டியிடாமல்-தனித்துவமான
தனி மனித ஆன்மீக கிளாச்சியாளராய் இயேசு

இறைவன் நம் தந்தை, இறை மக்கள் நீங்கள்
நம்மை அறிந்து, விழிப்புணர்வில் நிலைக்க அவர் அழைப்பு,
இரவு கழிய உதிக்கும் புதிய சூரியன்போல்
ஆணவமனம் கழிய தூய மனம் தோன்றுதலே உயிர்ப்பு
உயிர்ப்பு சுத்த சைதன்யத்தின் உன்னதக் குறியீடு

மனுமகன் இயேசு சிலுவையில் இறைமகனாக
தம்மைப் பிறப்பித்த அகப்புரட்சியே உயிர்ப்பு
ஆன்மா பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை
அவதார புருஷர்களில், அன்பின் பேரழகாய்
மைத்திரேய புத்தராய் அவர்

விழிப்புணர்வில் நிலைக்க-ஒளி உண்டாகுக-
ஆதியின் முதல் வார்த்தை.
ஆணவ இருளும், இறை ஒளியும் நம்முள்ளே

விதை மடிய துளிர் முளைக்கின்றது-இயேசு
சிலுவையில் கிறிஸ்துவாய் தம்மை தாமே பிறப்பித்துக்கொண்டார்
தாயுமின்றி, தந்தையுமின்றி நிலை மாறிய உன்னத நிலை
புரட்சியின் முழுமை

தனி மனிதப் புரட்சியாளர், தனி மனிதனாய்
அன்புப் புரட்சி செய்ய விடுக்கும் அழைப்பே சிலுவை,
இரண்டாம் பிறப்பாய் அது-
இறையரசின் மலர்வாய் மற்றோர் உருமாற்றமாய் அது.

மனுமகனாய்ப் பிறப்பவனுக்கே நத்தார்
இறை மகனாய் மலர்ந்தவனுக்கே, உயிர்ப்பு
நம்மில் இயேசு பிறந்தால்- அதுவே நம் மெய்யான
பிறந்த நாள், வாழ்வு ஆன்மீக கிளர்ச்சியாகும் திருநாள்

நம்மை சிலுவையில் அறைவார்-நம்மில் கிறிஸ்து எழுவார்
அதுவே நம் உயிர்ப்பு , வாழ்வு ஒரு கொண்டாட்டம்
ஒவ்வாரு மனிதனுக்குள்ளும் இயேசு பிறப்பதே கிறிஸ்மஸ்

நம்மிலே இயேசு பிறக்காதவரை நத்தார், உயிர்ப்பு
வருடந்தோறும் கும்பல்கள் கொண்டாடும் விழாக்களே
மண்ணோடு மண்ணாவதும், விதையாய் மடிந்து முளைத்து
விண்ணோக்கி எழுவதும் நாமே
நமக்கு நாமே மீட்பன்-நாம் கிறிஸ்துவே-
உலகின் ஒளியாய், உப்பாய் வாழ இன்றும் அவர் அழைப்பு

அஹம் பிரம்மஸ்மி, தத்ததுவமஸி
நானும், தந்தையும் ஒன்றே, நம்மை அழைக்கின்றது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-12-07-2023*

# அனுராகம்

எண்ணில்லா ஆனந்தம் இள நெஞ்சில் எழுந்தாட
வண்ணமலர்கள் கோடி இதயத்தில் பூத்தாட
இதயத்துடிப்பும் இன்னிசையாய் களித்தாட
தந்தையும், மகனும் உறவாடும் இன்பப் பொழுது

புலன் ஒடுங்கி, மனம் அழிந்து ஆனந்தம் பொங்கிட
வார்த்தைகளற்ற மொழியாய், ஓசையற்ற இசையாய்
அப்பா! தந்தாய்! என்று இதயம் அழைத்துக் களிகூர
மௌன ராகம் மனதிற்கு இசையானது

அன்பின் மணம் மலரினும் இனிதாக
ஆன்மாவின் ஆனந்த நர்த்தனம் ஜெபமானது
தனிமையில் இயேசுவின் ஜெபம்
தந்தையோடு ஒன்றாகித் தவத்திலும் இனிதானது.

ஆன்மா லயம் பெறும் ஆலயம் கள்வர் குகையாக
பசுத்தோல் போர்த்திய ஓநாய்கள் தலைமைக்குருக்களாய்
ஆட்டு மந்தையை வேட்டையாடும் அவலம்
கொடுஞ்சினத்தை தூண்டியது.

பலியை அல்ல இரக்கத்தையே விரும்புகின்றேன்
பொருளற்ற இறை மொழியாக
விலங்குகளும், பறவைகளும், நாளும் பலியாக
குருக்களுக்கும், லேவியருக்கும் மாமிசம் விருந்தானது

உயிர்களின் பரிதாபக் குரல்-இறைவனை எள்ளி நகையாட
சிந்திடும் குருதியும், செந்தீயில் வெந்திடும் நிணமும்
ஆலயத்தின்அழகை சிதைத்து அம்மணமாக்கிட
சடங்கு, சட்டமாய் உருவழிந்த மதம் மனதைப் புண்படுத்தியது

சந்தையான ஆலயம்-இறை நிந்தையின் இருப்பிடமாக
விந்தையான ஆன்மீக வியாபாரிகள், மந்தையாய்
மானுடத்தை ஆட்டிப் படைத்து, தந்தையின் வாழிடத்தை
கள்வர் குகையாக்கி செல்வம் குவித்திட-நெஞ்சம் குமுறியது

தந்தையின் வீட்டை கூட்டிப் பெருக்கி கோயிலாக்கிட
சாட்டையால் கோலமிட்டதும், நானும் தந்தையும் ஒன்றென்றதும்
ஆன்மீகக் கிளர்ச்சியின் அபூர்வ ராகமானது

சாட்டை அடிகளால் விறைத்த மனங்களின் உணர்வுகள் விழித்திட
கூண்டுகள் திறந்திடப் பறவைகள் பறந்திட , நாணயங்கள்
நாலாதிசையும் சிதறிட,சிவந்த முகத்தில் ஒளிர்ந்த தணல்
இருண்ட மனச்சாட்சிகளைப் புடம் போட்டது

ஜெபம்
சொல்லாடல் அல்ல
சொல்வதை திருப்பி சொல்லும்
கிளிப்பிள்ளை மந்திரமல்ல
வார்த்தை ஜாலம் அல்ல
பொங்கிப் பூரிக்கும்
தூயமனதின் இன்னிசை அது
நொருங்குண்ட இதயத்தின்
அனுராகமது
அப்பா! தந்தாய் என அழைக்கும்
உறவின் குரல் அது.
ஆணவம் கழித்திட
தன்னை அர்சனையாக்கும்
சரணாகதியது
தூய மனதின் அகப்புரட்சியது
வரண்ட சித்தாந்தங்களின்
கூப்பாடு அல்ல
ஆன்மீகப் பரிணாமத்தின்
புதிய தோற்றமது

அஞ்சாமையின் அறைகூவலாய் , உண்மையிலும் ஆவியிலும்
உண்மை இறைவனைத் தொழுங்கள்,-வார்த்தைகள் கடந்து
வன்முறை கழித்து, கர்ம யோகமாய், பக்தி மார்க்கமாய்
ஆன்மீக கிளர்ச்சியாய் இயேசுவின் ஜெபம்

கொடிய வேதனையில் சிலுவையில் தொங்கியவருக்கு
கர்மயோகி கண்ணனின் வேனுகானம் இதம் தர
ஞானயோகி புத்தர் பெருமானின் காட்சி சாந்தி தர
அவதாரங்களின் ஆன்மீகக் கிளர்ச்சி அதிசய ராகமானது

“தந்தையின் வீட்டில் உறைவிடங்கள் பல உண்டு”
அபூர்வ ராகமானது, பரி பூரண சரணாகதியே
இராஜயோகம் என்றானது

என தேவனே என் தேவனே ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர்
சத்தியத்தின் சாட்சி, சத்தியத்தை கூவியழைத்து
பரிபூரண சரணாகதியில் சாந்தி கண்டது
அகத்தில் இராஜயோகத்தின் மலர்ச்சி -இயேசு,
கிறிஸ்துவாகும் அகப்பயணம்-உள்ளுணர்வின்
உன்னத தெய்வீகப் பரிணாமமானது

மொழி கடந்த ஆதியின் வார்த்தை மொழிக்குள் சிறையுண்டு சிதைபட
இறைமகன் தம்மைப் பலியாக்கி உலகை மீட்டார் இறையிலானது
இயேசுவின் ஆன்மீகப் புரட்சி-பொருளிழந்து
பவுலால் பாதை மாறிய பயணமானது.

ஆலயங்கள் கள்வர் குகையாயின
மானுடமே பகுத்தறிவில்லாத மந்தையானது
வெற்றுச் சிலுவை ஆலய முகப்பில் வெருளியானது

இயேசு, கண்ணன், புத்தர் நாமங்கள் அல்ல
உள்ளுணர்வின் அதி உன்னத நிலைகள்
அனுபூதியில் புரிந்தவருக்கு -மதம்
கடந்த ஆன்மீகம் பேரின்பமானது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10-07-2023*

# ஆதாம் -ஏவாள்

---

புல்லும், பூஞ்செடி கொடிகளும், மாமரங்களும் பூச்சூடி அலங்கரிக்க
பூந்தும்பிகளும் வண்டினங்களும் பாட்டிசைத்து ரீங்கரிக்க-
பூமியெங்கும் வசந்தத்தின் வண்ணக்கோலங்கள்-ஆதாமின் இதயத்துள்
பாலையின் வெறுமை-இனம்புரியாத தனிமையின் கொடுமை

துள்ளி வியைாடும் புள்ளிமான்களும், கொஞ்சி விளையாடும்
வெள்ளைப் புறாக்களும், கவிபாடும் புள்ளிக் குயில்களும்
கிள்ளை மொழி பேசும் பச்சைக்கிளிகளும்
காதல் இசைபாட எங்கும் காதல் வெள்ளம்

அல்லியும் ஆம்பலும் சூடிய பொய்கையில்
கயல்களும் துள்ளி காதல் செப்பிட-கத்தும் தவளைகளும்
காதலால் பாய்ந்து களிநடனம் புரிந்தன.

வெள்ளி முளைத்த வானில் விளையாடும் வெண்ணிலவும்
தனிமையின் துயரம் கூட்ட, ஏதேன் தோட்டத்து-
ஆதாமின் இதயத்துள் ஏகாந்தத்தின் ஆக்கிரமிப்பு

உறவாடத் துணை தேடும் கலைமானாய் இதயம் புலம்பிட
கரைபுரண்டு திரும்பும் அலைபோல்-நெஞ்சம்
வெறுமைக்குள் திரும்பத் திரும்ப அலைபாய
மனதில் இனம்புரியாத சோகத்தின் நிலைப்பு

இதுவரை அறியாத துயருக்குள் இதயம் மூழ்கித் தவிக்க
கோலின்றிக் குருடன்போல் நெஞ்சம் தட்டு தடுமாறி நடக்க,
நரகாய் வாட்டும் ஏகாந்தம், இரசிக்க மனமில்லாத வசந்தம்

தனிமையின் கொடுந்துயரத்தை அறிந்த தந்தை-ஆதாமை
ஆழ்துயிலில் உறங்கவைத்தே அவன் இடது விலா என்பெடுத்து
பெண்ணெனும் பேரழகை ‘உரு’ ஆக்கி, உயிர் கொடுத்தே
ஆதாமின் உயிர் துணையாக்கி மகிழ்ந்தார்

பெண்ணழகோ-பூவழகு, இடையழகோ-கொடியழகு
விழியழகோ-கயழலகு, முகவழகோ நிலவழகு
இவளோ -முதல் ஆண் கண்ட பெண்ணழகு
தனிமைத் துயர் நீக்க இறை தந்த தாரமோ பேரழகு

துயில் கலைந்து கண் விழிக்க, மொழியிழந்து தோகை மயிலும்
நடைபழகி நாணி நிற்க, விழிகள் கலந்து காதல் பிறக்க
இறைவன் படைக்காத காதலர் உலகை-இருவரும்
இணைந்து படைத்தே இன்பவனத்தில் பூரித்தார்

ஏதேன் தோட்டத்து-ஆதாமின் இதயத்துள் வசந்தவிழா-
இருமனம் இணைந்து திருமணமாய் கொண்டாடும் காதல் விழா

கண்வழி நுழைந்து-கருத்தினில் கலந்து
நெஞ்சினில் வாழும் தேவதை இவள்தானோ?
என் என்பின் என்பானவள் என் ஊனின் ஊனானவள்
என்னுள்ளோடும் குருதியிலும் உயிர்காற்றிலும் கலந்தவள்

என்னுள்- எனக்காய்த் தவமாய் தவமிருந்தவள் இவள்தானோ?
என்பில் உருவாகி-இறையன்பில் உயிராகி
என்னைச் சேர்ந்த என் என்போ? இறையன்போ-இவள்

பெண்ணாகிப் பேரழகாகி என்னோடு சேர
தந்தை இறைவன் தந்த அன்புறவோ- இந்தத் தேன்கரும்பு?
என் என்பில் இறைசிற்பி வடித்த காதல் பொற்சிலையோ?
கவிஞனாய் என்னை மாற்றிய கானக்குயிலோ?

நாழிகைகளே யுகங்களாக, நாளும் பொழுதும் தனிமைத்
தவமிருந்து வரமாய் பெற்ற காதல் தேவதை இவள்தானோ?
இருளுக்கு ஒரு வெண்ணிலவு, ஏகாங்கி எனக்கு ஒரு பெண்ணிலவு
இவளோ என் தேன்நிலவு, இதயம் தேடிய அன்புறவு

முத்தங்கள் ஊறும்-தித்திக்கும் இதழ் “கள்”
முப்பொழுதும் வற்றாத இன்பச்சுனைகள்
காமத்துப் பாற்கடலில் உள்ளங்கள் ஆனந்த நீராட
கடவுளும் மகிழ்ந்தார் படைப்பின் முழுமை நிறைவேறிட

இன்பதுணையாய், இறைவன் தந்த வாழ்கைத் துணையிவள்
இறைமகளிவள் ஒன்றாய் கலந்து படைப்பை தொடர்ந்திட
படைத்தவன் படைத்த அன்பின் பிணைப்பிது
காதலும் பிறந்திட கவிதையும் பிறந்தது.

உலகின் முதல் காதல் கவிதையை ஆதாம் பாடிட
காதலனைக் கவிஞனாக்கிய ஆனந்தம், காதல் தேவதை
ஏவாள் மனதில் பூவாய் மலர்ந்திட எங்கும் புதுவசந்தம்

என்னையும் தன் சாயலாய் படைத்தவர்-என்னில்
ஒரு பாதி பெண் எனச் சொன்னவர்-தானும்
ஆண் பெண் இணைந்த அர்த்தநாரிஸ்வரன் எனச்
சொல்லாமல் சொன்னாரே தந்தை இறைவன்.?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10.07-2023*

# தனிமைத்துயர்–ஆதாம்- (*Adam's Syndrome*)

{ஆண்டவராகிய கடவுள்-மனிதன் தனியாய் இருப்பது நல்லதன்று
அவனுக்குத் தகுந்த துணையை உருவாக்குவேன் என்றார் ( தொ. நூ.2-18)}

——————————————————————————————————————————

என்னைத் தழுவும் பூங்கொடியோ?-இவள்,
என்னுள் உலாவரும் சுவாசக்காற்றோ?, என்
இருண்ட வானில் ஒளிதரும் வெண்ணிலவோ? -பாவையிவள்
என் பூவனத்தில் காதல் சிந்துபாடும் பூங்குயிலோ?

தாயாய் என்னைத் தாலாட்டும் அன்புறவோ?,
என் தனிமைத் துயர் தீர்க்கும் வானமுதோ?
வாழ்க்கைத் துணாய் இறை ஈந்த வரமோ?-காதலால்
என் உள்ளத்தை கொள்ளை கொண்ட தேவதையோ?

என் என்பின் என்பானவள், என் ஊனின் ஊனானவள்
என் இதயத் தவிப்பை உணர்ந்தே என்னிலிருந்து-இறை படைத்த
பெண்ணிவள்-ஏவாள் என் இதயகோயிலின் காதல் தேவதை.

மது போதையோ-சில மணி நேரம், மாதிவள் காதல் போதையோ
காலம் உள்ளவரைக்கும், மானுடன் நெஞ்சில் நிலைக்கும்

இறைவன் இணைத்த காதல் உறவிது
இதயச் சங்கமத்தின் இருப்பிது.
மானுட சந்ததியின் தொடக்கமிங்கே
காதல் வரலாற்றின் பிறப்புமிங்கே.

ஏதேன் தோட்டமமெங்கும்- எதிரொலிக்கும் ஆதாமின் காதல் கீதம்
ஏவாளை மயங்கவைத்த முதல் மனிதனின் முதல் காதல் பாடல்

இன்று- (தனக்கு தகுந்த துணையை மனிதன் காணவில்லை-(தொ.நூ..2:23)

——————————————————

என் இதயமெங்கும் ஏதேன் தோட்டத்து
ஆதாமின் ஏக்கம்,
இறைவனிருந்தும், கூட எல்லாமிருந்தும் -
கொடிய தனிமையின் தாக்கம்.

காதற் கிளிகளின் கிள்ளை மொழியும், சோடிப் புறாக்களின்
காதல் ஒலியும் கூடி விளையாடும் -மான்களின் காதல் நிலையும்
மனதை வாட்டிட, சிலந்தி வலையில் சிக்கிய பட்டாம் பூச்சியாய்
தனிமையில் சிக்கித் துடிக்கும் சின்ன இதயம்.

மூச்சை முட்டும் தனிமை, நெஞ்சின் ஏக்கத்தை கூட்டிட,
அலைபாயும் நெஞ்சம், நீரோடை தேடும் மானாய்
பாலையில் அன்பைத் தேடி அலையும்.

சூனியத்தின் கொடிய ஆக்கிரமிப்பு இதயத்தை வாட்டிட
தலைசாய்த்திட தாய்மடி தேடும் குழந்தையாய்
அன்பைத் தேடி அலையும் -குழந்தை மனம்.

அனல்காற்று வீசும் பாலையாய் காளை மனம் கொதித்து கிடக்கும்
அன்பு மழைக்காய் இதயம் பாலைவன ரோஜாவாய் ஏங்கித் தவிக்கும்,
ஏழ்கடலின் அலைகள்போல் சோகம் நெஞ்சில் அலைமோதிட,
இமயத்தை சுமக்கும் பாரமாய் இதயத்தை "தனிமை வாட்டும்"

தனிமையின் கொடுமையில், என் தேவனே! என் தேவனே!
ஏன் என்னைக் கைநெகிழ்ந்தீர் மனம் கதறிட
கல்வாரித் துயரத்தை இதயம் அனுபவிக்கும்.

தென்றல் தீண்டும் போதெல்லாம் தீயும் தேகம்,-தேன்குரலில்
பூங்குயில் பாடும்போதெல்லாம் ஏங்கும் காளை நெஞ்சம்,-
வான்பரப்பில் வண்ண நிலா உலா வரும்போதெல்லாம்-வாடும்
தனிமையுள்ளம், தேன் மலரைத் தும்பி தீண்டும்போதெல்லாம்-
தித்திக்கும் முத்தப்பூச்சூட தவிக்கும் காதல் நெஞ்சம்.

காதல் இல்லாத உலகில் வாழ்வே கானல் நீராகும்
ஆதாமின் தனிமைத்துயர் நோயாய் நெஞ்சை வாட்ட –இதயம்.
ஏவாளிற்காய் நாளும் பொழுதும் துடித்து இளைக்கும்

இன்னோர் ஆதாமாய்-ஏழை மனம் ஏதேன் தோட்டத்தில்
தனிமையில் வாடித்தவிக்க, ஒற்றை குயிலாய் உள்ளமும்
ஒரு துணைக்காய் கூவி களைக்க, இறைவனோ அர்தநாரீஸ்வரன்

எல்லாம் மாயைதானே?
ஏழை என்தன் வாழ்வும் வீணோ?
பார்வதி இல்லாத் தேவதாஸின் உலகோ
வரண்ட பாலைவனம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-10-07-2023*

# அடிமைத்தனமும், மத வேசித்தனமும்

---

**இஸ்ராயேலின் அடிமைத்தனம்**

இனச்சுத்திகரிப்பின் இன்றியமையாத் தொடக்கமாய்
இஸ்ரேலிய ஆண்குழந்தைகள் பிறப்பிலே கொல்லப்பட,
பிழைத்தவையோ நைல் நதியில்
"*சோபெக் முதலைத் தெய்வங்களுக்கு*"
அர்ச்சனைப் பூக்களாய் தூவப்பட-நரபலியேற்கும்
மிருகதெய்வங்களால் நாறிச் சிவந்த நைல் நதி
தாய்க்குலத்தை வாட்டிடும் எரிநரகாய் சோகத் தீ

கடவுளைக் கூவியழைத்து களைத்த உறவுகளோ
கண்ணீர்க் கடலில், உண்டு, குடித்து இனம்பெருக்கி
இன்பம் துய்க்கும் முதலைகளோ நைல் நதியில்

வசையால் வாடிய செவியும், கசையால் வருந்திய உடலும்
சுமையால் கூனிய முதுகும், பசி தீய்க்கும் வயிறும்
உருக்குலைந்த தேகத்தில் பறக்கச் சிறகின்றி சிறையிருக்கும்
"உயிர் பறவையும்" அடிமைகளின் இழிநிலையானது-
எகிப்தியரின் முதலாளித்துவ அராஜகம் இரும்பு நுகமானது

வான் முட்ட வளர்ந்த பிரமிட்டுக்களும், வளமிக்க பித்தோஸ்-
இராம்சே நகர்களும், இஸ்ராயேலரின் ஆயுட்கால உழைப்பானது
நீர் முட்டும் விழிகளும், நெருப்பெரியும் தாய் உதரங்களும்
அவர்தம் பெருமூச்சால் பாலையினும் சூடானது
அடிமைகளின் கண்ணீர் வீழ்ச்சி ஏழ்கடலினும் உப்பானது

புடைத்த வயிற்றோடு உண்டு களித்த "சோபெக் முதலைகளும்"
இரும்புக் கரத்தோடு அரியணையில் விறைத்துக் கிடந்த"பாரோவும்"
"தெய்வங்களான" தேசத்தில், கனத்த இதயங்களோடு
கண்ணீர் சிந்தும் அடிமைகளின் சோகம் "முகாரி ராகமானது"

எரிபலியாய் இஸ்ரேலியரின் வெப்ப பெருமூச்சும்
நீர்படையலாய் உப்புக் கண்ணீரும், உணவுப் படையலாய் -
நரபலியாகும் சிசுக்களும்  வானைச் சென்றடைய
வல்ல "***யாவேயின்***" கோபம் எகிப்தியரை வாட்டியது

ஆளும் வர்க்கம், தொழிலாளிகளின் உழைப்பையும், உதிரத்தையும்
சுரண்டிக் கொழுத்திட, அடிமை வர்க்கம் உழைத்து மெலிந்திட,
வர்க்க போராட்டங்களால் மானுடம் இரண்டானது
தொழிலாளிவர்க்கத்தின் குருதியால் வரலாறு சிவப்பானது

"சக்தியும், சடமுமாய்", "சிவசக்தியாய்""இருப்பவார் நாமே"
என்றவர் எரியும் முட்செடியில் செங்கொடியாய் காட்சி தர -மோஸே
தலைமையில் தொழிலாளி வர்க்கம் நடத்திய முதற் புரட்சி
பொய்த் தெய்வங்களுக்கு எதிரான"யாவேயின் வல்ல கிளர்ச்சியானது"

நானூறு ஆண்டுகளாய் அடிமைகளாய் ஒடுக்கப்பட்ட இனம்
கொண்டாடிய முதற் எழுச்சி ‘‘பாஸ்கா விழாவானது’’
நிலைகளிலும், மேற்சட்டங்களிலும் பூசப்பட்ட ஆட்டு இரத்தம்
உழைக்கும் வர்க்கத்தின் செங்கொடியானது-விடுதலைக்காய்
சிந்தப்படும் இரத்தத்தின் முன் அடையாளமானது.

ஒடுக்கப்பட்ட வர்க்கம் சுதந்திரம் அடைந்தபோது
தன் தனித்துவத்தைப் பேண, தலைமைத்துவத்தை இறைவனிடம்
ஒப்புவித்தே ‘‘யாவேயின் தெரிந்த கொள்ளப்பட்ட’’
யூத இனமாய் தன்னை இனம் காட்டியது.

புரட்சியின்போது முதலில் சிவப்பான நைல் நதியும்
முடிவிலோ வழிவிட்டு புரட்சிக்கு துணைபோன‘‘செங்கடலும்’’
உழைக்கும் வர்க்கத்தின் செஞ்சட்டைத் தோழர்களோ?
‘‘ஆயுதப் போராட்டமே’’ தொழிலாளியின் மீட்சி வரலாறானது
பின்நாளில் ‘‘கார்ல் மாக்ஸின்’’ புரட்சிக் கூற்றானது

பத்து பெரும் துன்பங்களால் எகிப்தியரும் வாடிட
செங்கடலும் ஒதுங்கி வழிவிட, அடிமைகளும் சுதந்திரமானார்
பாலும் தேனும் பொழியும் நாட்டின் குடி மக்களானார்

இறைவனும் இயற்கையும் உழைக்கும் வர்க்கத்தோடு-ஒன்றிணைந்து
முதலாளித்துவத்திற்கெதிராய்-நடத்திய முதற்போராட்டம்
‘‘இஸ்ரேலியரின் விடுதலைப் போராட்டமானது’’
நாடு கொள்ள யூத இனம் வழிநடந்த பாதை போராட்டங்களால்
அன்றும் சிவப்பானது இன்றும் சிவப்பானது- ‘‘புரட்சி’’
எரிந்தும் கருகாத முட்செடியானது?

இன்றோ பாரோக்களாய் மாறிய-இஸ்ராயேலரிடம்
பரிதவிக்கும் அடிமைகளாய் பாலஸ்தீனம்
காஸாவையும்-மேற்கு கரையையும்
திறந்த சிறைகூடங்களாகிட-எந்தத் தேவனுக்கும்
எட்டாத ‘‘அவலமாய்’’ இவர்தம் அவலம்

வல்ல யூத‘‘யாவேயும்’’கிறிஸ்தவப் ‘‘பிதாவாகி:’’
இஸ்லாமியரின் ‘‘அல்லாவுமாகி’’ அமைதியிழந்து தவிக்கின்றார்.
புதிய வேதம் கொடுத்திட மானுடம் தேடி அலைகின்றார்

***தீண்டாமை***

மனுஸ் மிருதியால் மானுடம் பிளவுபட்டது
‘‘தீண்டாமை’’ சூடிய நான்காம் வர்ணம் சபிக்கப்பட்டது
‘‘வேதம்’’ தீண்டாதவன் செவிகளை வருத்திடும்
‘‘காய்ச்சிய ஈயமானது’’.

கலைமகள் கைப்பொருளாய்-பிராமணரும்
மலைமகள் ஆயுதமாய் -க்ஷத்திரியரும்
திருமகள் திருப்பொருளாய்-வைசியரும் விளங்கிட

''உழைக்கும் வர்க்கம்'' தீண்டாமையால் ''சூத்திரனானது''
தீண்டாமை ''பிராமணிய நீதியானது''.

மானுடம் எழுந்து நடக்க பிரம்மாவின் காலினின்று
பிறந்த சூத்திரன் உழைப்பே காரணமானபோது
அவன் கீழ்சாதியானதென்ன நீதி?

குடையும், கோயிலும், மேற்சட்டையும், காற்செருப்பும்
தெருவும், நீர்த்துறையும் சூத்திரனுக்குத் தடையாக
'அக்கிரகாரம்'' விதித்திட்ட அக்கிரமம் நீதியானது
தீண்டாமை என்றும் வாழும் சனாதன தர்மமானது

ஒன்றே குலம் ஒருவனே தேவன்-
யாதும் ஊரே!.யாவரும் கேளீர்
வெற்றுச் சத்தமாகி செத்துப்போனது.

''குலத்தை அழித்தவர்களின் தீமைகளால்
ஜாதிக்கலப்பு ஏற்படுகிறது.அதன் காரணமாக
காலங்காலமாக இருந்துவருகின்ற ஜாதிதர்மங்களும்
குலதர்மங்களும் அழிகின்றன.
-கீதை-அர்ஜீன விஷாத யோகம் 1: 43

பிராமண பரசரருக்கும் -மீனவ சத்தியவதிக்கும் பிறந்த
''கறுப்பனோ அனுலோமன்'' (கிருஷ்ண துவைபாகன்) ''வேதவியாசன்''-
க்ஷத்திரிய சந்தனுவிற்கும் சத்தியவதிக்கும் பிறந்தவன் விசித்திரவீரியன்
அவன் க்ஷத்திரிய மனைவியர், அம்பிகாவிற்கும், அம்பாலிகாவிற்கும்
வியாசனிடம் பிறந்த திருதராட்டினனும்-பாண்டுவும் க்ஷத்திரியர்.
பணிப்பெண்ணிடம் பிறந்த விதுரன் சூத்திரன் வேடிக்கை?
கடமையே பாதை- கீதையின் வருணாச்சிரம தர்மம்?

வர்ணக்கலப்பால் மானுட ஜாதி வானவில்லானபோது
அர்ஜீனன் கேள்வி வியப்பானது.-நதி மூலம் -ரிஷி மூலம்
பகுத்தறிவுக்கு எட்டாத வினாவானது?

மனுவின் வர்ண (அ)நீதியால் யுகங்களாய்
அடிமைகளாய் வாழ்ந்த இனம், தீண்டாமை தீண்டியும் தீயாத
'' டாக்டர் அம்பேத்காரின்'' இந்திய அரசியல் யாப்பினால்
விடுதலையானது- மதியா? இறைநீதியா?

தீண்டாமை அழிய பௌத்தர்களாய்-கிறிஸ்தவர்களாய்
இஸ்லாமியராய் மதம் மாறிடும் மானுடம் கண்டதெல்லாம்
''கருப்பு நீதிதான்''.-கலையாத இருள்தான்

ஆதி சங்கரரின் ''அஹம் பிரம்மஸ்மீ'' உடல் சார்ந்ததா?
சுயம் சார்ந்ததா? விடை கூற மறுக்கும் சங்கராச்சாரி
தலித்துக்களோ இன்றும் தீண்டாத சாதி
சமஸ்கிருதமோ வேதமொழி?

அரசியல்-சமூக-பொருளாதார ஆன்மீக விழுமியங்களை
சாதியத்தால் முடமாக்கி நூற்றாண்டுகாலமாக, அடிமைகளாய்-
தீண்டாதோராய் அழியவிட்டது சனாதன தர்மமோ?
மானுடத்தை முடமாக்கும் மதங்களும் வேதங்களோ?

வர்க்கபோராட்த்தின் சூட்சும வடிவமாய் ஆளும் வர்க்கம்
மானுடத்தை அடிமைகளாய் வைத்திருக்க கண்டுபிடித்த-சாதியம்-
பிராமண சூத்திரதாரிகளின் தந்திரம்?

ஏழைத் தொழிலாளியின் உழைப்பையும் உதிரத்தையும்
காலாகாலமாய் உறிஞ்சிடும் முதலாளித்துவ
சுரண்டல் வடிவமே, சாதியம் என்னும் தீண்டாமை.

ஏழ்மையிலும்,அறியாமை இருளுக்குள்ளும்-எந்நாளும்
தொழிலாளர் வர்க்கம் சிறையிருக்க சமூக-அரசியல்-பொருளாதார
ஆன்மீக-உளவியல் வளர்ச்சியினை ஊனமாக்கி-அவர்தம்
உழைப்பையும் உதிரத்தையும் உறிஞ்சியே முதலாளிவர்க்கம்
தொழிலாளிவர்க்கத்தை தீண்டாதோராய் பச்சை குத்திய துரோகம்
மன்னிக்க முடியாத குற்றமே

ஆளும் முதலாளி வர்க்கம் ஆண்டவனாக
உழைக்கும் தொழிலாளி வர்க்கம் அடிமையாக
'மதம்'' முதலாளித்துவத்தின் ஆயுதமானது
''சாதியம்'' ''சாத்தானின் வேதமானது.''

## <u>***கறுப்பு அடிமைத்தனம்***</u>

இருண்ட கண்டத்தின் ''கறுப்புச் செல்வத்தை''
வெள்ளையர் 'விலங்குகளாய்'' வேட்டையாடி
''மலிவுச் சரக்காய்'' அடிமைச் சந்தைகளில் விற்றபோதும்
வெள்ளையரின் ''கமத்திற்கும்'', 'காமத்திற்கும்''
அடிமைகளின் கறுப்பு உடல்கள் பலியானபோதும்
குரல் கொடுக்க எந்த ''கடவுளும்''
கறுப்பு அடிமைகளுக்கில்லாத கொடுமை.

நாதியில்லா கறுப்பு மாதுக்கள் வெள்ளையர் விந்தை
சுமந்திட சிந்தியகுருதி கறுப்பல்ல சிவப்பே
இறைமகனின் கல்வாரிப்பலிக்கு இணையே!

நூற்றாண்டுகளாய் வெள்ளையர் அடிமைத்தனத்தில்
''கிறிஸ்தவ நுகத்தில்'' பூட்டப்பட்ட கறுப்பு அடிமைகளின்
கூக்குரல் ஏனோ வல்ல ''யாவேயிற்கு'' கேட்கவில்லை.

இனவாத வேதத்தில் யூதமதவாதியான 'கடவுள்''
முதலாளியான கொடுமை, ஷைலொக்குகள் இன்றும்
'அன்டோனியாக்களின்''தசையோடு இரத்தத்தையும்
கேட்கும் புதுமை வரலாற்றின் பழைய பாடம்.

அடிமைகளே நீங்கள் கிறிஸ்துவுக்கு கீழ்படிவதுபோல் இவ்வுலகில்
உங்கள் தலைவர்களாய் இருப்பவர்க்கு அச்சத்தோடும் நடுக்கத்தோடும்
முழுமனதோடு கீழ்படியுங்கள்- எபேசி.6:5-9

பாதை மாறிய பவுலின் போதனை முதலாளித்துவ வேதமாய்
அடிமைத்துவத்தை நியாயயப்படுத்தும் (அ) நீதிச்சட்டமாய் ஒலித்திட
அன்பு இறைவனும் கொடிய‘‘பாரோவான’’ விகாரம்
வேதாகமமும் ‘‘சாரமற்ற உப்பாய்’’ மாறிய துயரம்
‘சாத்தானின் வசனங்கள்
வேதங்களாய் பரிணாமமடைந்த அவலம்’

கறுப்பு அடிமைகளின் ‘‘கண்ணீர் காயாத முகத்தை’’ துடைத்திட
எந்த ‘‘வெரோணிக்காவுமில்லை’’, அடிமை நுகத்தை சுமந்திட
எந்த ‘‘சீரேன் சீமோனுமில்லை’’ யாரும் கண்டு கொள்ளாத
எந்த வேதமும் சொல்லாத கல்வாரிப் பாதை
கறுப்பு அடிமைகளின் சிலுவைப்பாதை.

அடிமை, சிலுவை சுமப்பது ஆண்டவன் கட்டளை எனப் போதித்திட
மறைபரப்பாளர் கைகளில் ‘‘புதிய எற்பாடு’’
‘‘முதலாளித்துவத்தின் முகவராய்’’ கடவுளும் மாறிட
கடவுளைப் பாரோவாக்கிய கிறிஸ்தவக் கோட்பாடு

‘கறுப்பு’’ நிலக்கரியையும், கச்சா எண்ணெய்யையும்
‘சக்தி வளங்களாய்’’ கண்ட முதலாளித்துவம்
‘‘கறுப்பர் உழைப்பையும் ’’ சக்தி வளமாய் கண்டு சுரண்டிட
விவிலியம் கருவியான அவலம், கொடுத்த வேதங்களால்
மனமுடைந்த தேவன் கண் மறைந்த துயரம்

தோரா, இஞ்சில், அல்குரான் ‘‘யூதம்-கிறிஸ்தவம்-இஸ்லாம்’’
வேதம் கொடுத்துக் களைத்தவர் புதிய வேதம் கொடுத்திட
மானுடத்தை தேடுகின்றார், பௌத்தர்களே, கம்யூனிஸ்ட்டுக்களே,
நாஸ்தீகர்களே இறைவனை கண்டால் கூறுங்கள்.
வேதமின்றி- சாதி-மத-நிற-பேதமின்றி விலங்குகள்-கானகத்தில்
நலமாய் வாழும்போது நமக்கெதற்கு புதியதோர் வேதம்

சாதி-மத-நிற ‘‘அடிமைகள்’’ சாதித்ததெல்லாம் ‘‘அடிமைத்தனமே’’
‘‘புரிந்ததெல்லாம் வேசித்தனமே’’, அன்பே சிவமாய்
சத்தியமே பாதையாயிருக்க இறைவா இன்னொரு வேதம் எதற்கு?
இன்னொரு இறைவனும் இனியும் எதற்கு?

***அழுகைச் சுவரிலும், அல் அக்ஸா பள்ளியிலும்***
***இராமர்கோயிலும், பாபர் மசூதியும்***
***மதவெறியர்கள் சிந்திய இரத்தம்***
***மதப் பயங்கரவாதமோ-சத்தியத்தை நிந்திகும் சத்தம்***

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-09-07-2023

# அழியாச் செல்வம்

---

ஆடுகளாய் வளர்வதிலும், ஏரோதிற்கு பிள்ளைகளாய் பிறப்பதிலும்-
யூதேயாவில் பன்றிகளாய் பிறப்பது நன்று என்ற காலம்
நாளும் பல ஆடுகள் ஆலயத்தில் பலியாக
ஏரோது பிள்ளைகளைக் கொன்று கொலைப் பசியாற,
பன்றிகளுக்கு அச்சம் இல்லை பலிக்கடாவாய் மாறிட
வரமோ, சாபமோ இல்லை

பலியை அல்ல இரக்கத்தை விரும்பும் இறைவன்
பாவ நிவாரண பலியாகத் தம் மகனை ஏற்றார் என்பதோ
திசை மாறிய சீடர்களின் கட்டுக் கதை
நாளும் பலியாகும் ஆடுகளின் அவலமோ தொடர் கதை

மனமகிழ்ந்து மரணத்தை இயேசு ஏற்கவில்லை
அஞசிக் குருதி வியர்வை சிந்தி-தந்தையை வேண்டி நின்றார்
என் தந்தையே என் தந்தையே, ஏன் என்னை கைநெகிழ்ந்தீர்
சிலுவையில் மனம் நொந்தார்?

நாளும் மாமிசம் உண்டு கொளுத்த குரு, லேவியருக்கோ நோய்கள்-
இறைச்சிக்கு வழியில்லாத ஏழைகளுக்கு வறுமையே தீராப்பெருநோய்-
தூய மனத்தவருக்கு சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கு இறையரசு, நன் மனத்தவருக்கு அமைதி-
பெருமான் இயேசு அருளும் அழியாப் பெருநிதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16-06-2023

# அமைதியைத் தேடி

---

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமை-பூவுலகில்
நன் மனத்தவாருக்கு அமைதி மாறாத நற்செய்தி
ஷாலோம்-சலாம் அலேக்கும் வெற்று வணக்கங்களாக-
மத்திய கிழக்கில் தொடரும் யுத்தங்கள்

அன்று வளநிலம் தேடிடும்- ஆதிக்குடிகளின் யாத்திரையில்
யாத்ரீகனாய் அபிரகாம், நிலக்கிழாராய்-வல்ல யாவே
பாலும் தேனும் பாயும் நாடு ஆபிரகாமிற்கு வாழ்நாளில் அமையவில்லை
வாக்களிக்கப்பட்ட பூமி-இன்றும் " **இறை *வாக்கான நிலை*** "

ஒரு வேரில் உருக்கொண்ட மும்மதங்கள்
யூதம்- கிறிஸ்தவம்-இஸ்லாம், பகைமையோடு போராட
வாள் கொண்டு வளர்ந்த மதங்கள் வாழ்வளிக்கும் மதங்களா?
வாழ்வை அழிக்கும் மதங்களா? புரியவில்லை.

மதம் பிடித்துப் போராட, மதப்பயங்கரவாதம் தலைவிரித்தாட
ஆண்டவனை மறந்தவர்கள்- ஆண்டவனாய் மாறிட
அணுவாயுதம் தேடியலையும் அவல நிலைகள்

***வல்லமைதான் இறைவன்,*** வல்ல பாரோவுக்கு -யாவே
பத்து கொள்ளை நோய்களால் புகட்டிய உண்மையோ
மதப் பயங்கரவாதம், அன்பே சிவம் அறியாத தவம்?

செங்கடல் தொடங்கி, வாக்களிக்கப்பட்ட பூமி வரை
மோஸே நடந்த பாதையில் இரத்தம்
முகம்மதுவின் வாழ்விலும் யுத்தப் பேரிகையின் சப்தம்
சிலுவைப் போர்களிலும் இரத்தம்
ஆபேலின் இரத்தம், இன்றும் இறைவனைக் கூவி அழைக்க
அண்ணன் தம்பிக்கிடையே தொடரும் முடிவில்லா யுத்தம்.

"ஏலி ஏலி லமா சபக்தானி" என் தேவனே என் தேவனே
ஏன் என்னை கைநெகிழ்ந்தீர்-சிலுவையில்
இன்றும் ஒலிக்கும் இயேசுவின் அவலச்சப்தம்.

(அழுகைச்) சுவர் நோக்கி தொழுபவர்களும்-அல் அக்ஸாவில்-
(க.ஃ.பா ) திசை நோக்கி தொழுபவர்களும்
(ஜெருசலேமில்) உரு நோக்கி வேண்டுபவர்களும்
அமைதியை வேண்டினரோ? அணு ஆயுதம் வேண்டினரோ?

சுன்னி -ஷியா போராட, சிலுவைப் போர்கள் ஓய்ந்து
வல்லரசுக்கள் எண்ணெய்காய் போர் துவங்க
விடுதலைக்காய் பாலஸ்தீனர் அல்லாட-எரிந்தும்
எரியாத முட்செடியில் தோன்றிய இறைவன்-எரிந்து மறைந்திட
யுத்த நெருப்பில் தீயும் மத்திய கிழக்கு.

மத்திய கிழக்கை யுத்தம் சுட்டெரிக்க- மதப்பயங்கரவாதம் -
பத்துத் தலை அரக்கனாய் தலை தூக்க
அணுவாயுதம் தேடும் ஈரான், அச்சுறுத்தும் அமெரிக்கா

யுத்தம் சிந்திடும், இரத்த கங்கைகள் வற்றிக் காயவில்லை
எரிக்கும் நரகத் தீயும் இன்னும் அணையவில்லை
உறவுகளின் கண்ணீரும் அகதிகளின் அவலமும் மாறவில்லை
இறைவனோ கண் மறைந்த அவல நிலை

இயேசுவை அழைத்திட-மதவாதிகளுக்கு நம்பிக்கையில்லை-
மதவாதக் கிறிஸ்தவம் மதமாற்ற வியாபாரமாய் மாறிய நிலை
அமைதிக்காய் குரல் கொடுக்க அமைதி கண்ட புத்தரும் இல்லை
அமைதியை ஈந்த அன்பு இயேசுவும் திரும்பி வரவில்லை

இறைவனைக் காண, தூய மனத்தவர் எவருமில்லை
அல்குரானும்-விவிலியமும் அனுதினமும் போராட
அல்லாகு அ.்.க்பரோ அச்சுறுத்த
பாரோவும்-ஏரோதும்-ஹிட்லரும்-நீரோவும்
செங்கிஸ்கானும் மீண்டும் வந்த நிலை.

மீட்போ மாண்டவனுக்கும் கிட்டாத கற்பனை?
மதங்களோ அபினியும், போதையுமான அவலநிலை

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-16-06-2023*

## அம்மையப்பன்

——————————————————————
அன்னையிருந்தபோது, நீயோ தந்தையாயிருந்தாய்
அன்னை மறைந்தபோது அநாதை எனக்கு
அம்மையப்பனாய் நீயே என் இறைவா

உன்னை நேசிக்க கோடிப் பக்தருண்டு-என்னை நேசிக்க
எனக்கு நீ மட்டும்தானுண்டு-அம்மையப்பனே
அநாதை என்னை மறவாதே.

## ஏலி ஏலி லமா சபக்தானி

——————————————————
சுற்றி நின்று அழ சொந்தமென்று யாருமில்லை
சுமந்து சென்று புதைத்திட நண்பரென்று எவருமில்லை
கற்ற வேதமெல்லாம் காவி பூண்டு துறந்திட
உற்ற தேவனும் "எட்டாவது" வானில் இருந்திட
விண்ணுக்கும் மண்ணுக்குமிடையே நின்று
ஏலி ஏலி லமா சபக்தானி என்றே கதறிட-என் இறைவா
ஏன் என்னை கைநெகிழ்ந்தாய்?

## ஊதாரி மைந்தன்

——————————————
புலன்வழி சென்று யயாதியாய் அலைந்தேன்
பொன்மானைத்தேடி இராமனாய் ஏமாந்தேன்
"நான்"வழி சென்று ஊதாரியாய் உருவழிந்தேன்
தந்தையே மனம்மாறி உனைச் சரணடைந்தேன்
பாவி என்னை மன்னித்தே ஏற்பாய்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-07-2023

# அமுத கானம்

கண்ணீரோடும், கறைபடிந்த கரங்களோடும்-இறைவா
என் நொருங்கிய இதயத்தை, காணிக்கையாய் தருகின்றேன்
ஏற்று என்னை ஆட்கொண்டருள்வாய் என் பெருமானே



என் கரங்களில் குறையிருந்தால், மன்னித்தருள்வாய்
நீ தந்த கரங்களிவை, பணிவோடு பயன்படுத்த-
நின்தன் தொடுகையால் என்னைக் குணமாக்கு-

என் மனதைப் புனிதமாக்கு, உன் நினைவுகளால்
களிகூரட்டும், நொருங்கிய இதயத்தை தூயதாக்கு
உன் திருமுகம் என்னில் ஒளிரட்டும், உன் ஆசிர் என்
வாழ்விற்கு மணிமுடி உன் திருப்பாதத்தில் என் நிம்மதி

நொருங்கிய இதயமே என் காணிக்கை
உன்னால் என் வாழ்வு ஒளிபெறட்டும்
என்றும் உன்தன் வழியே என் வழி
உந்தன் அமைதியோ என்தன் பெருநிதி

2

அக இருள் நீங்கிட. விழிப்புணர்வை அருள்வாய் -
என் இதயத்தில் அமைதியும், ஆனந்தமும்
உண்மையும் ஒளி வீசட்டும்,

ஞானத்தில் விழித்து நீயே என் பலம்,
நீயே என் அடைக்கலம் என
நான் அறிந்திட என் மனதை தூயதாக்கு
என் இதயம் உன்னால் ஒளிரட்டும்.

3

என் வாழ்வு உண்மையின் ஒளியால் ஒளிரட்டும்
உன் ஞானத்தை என் வாய் பொழியட்டும்-உன்னால்
நொருங்கிய இதயங்களை குணமாக்கட்டும்
ஒளிரும் இதயத்தில் இருள் இல்லை
உண்மையின் ஒளிக்கு எல்லைகளில்லை

4

உன்னோடு உன்னில் வாழ, என் வாழ்வில் இறை ஒளியேற்று
இருளில் உன் பாதை எனக்குப் புரியட்டும்
துக்கத்தில் என் இதயம் உன்னைக் கூவியழைக்கட்டும்
வெறுமையான என் வாழ்வு உன்னால் நிறையட்டும்

ஆசிரின் நிறை உருவகம் நீயே அப்பா
உன் அமைதியால் என்னை நிறைத்துவிடு
உன் சந்நிதியே என் நிம்மதி

5

என் விளக்கு எண்ணெய்யும், திரியுமின்றி
அணையத் துடிக்கின்றது, எண்ணெய்யும்,
திரியுமாய் மாறி அன்பினால், உண்மையின்
ஒளி பரவிட எனக்கு வாழ்வு கொடு

6

நிம்மதியை வெளியே தேடி வீணே அலைந்தேன்
உன்னருகே நான் இருந்தும், உன் அழைப்பு
என் செவிக்கு எட்டவில்லை
மந்தமான என் செவிகள் பரிதாபத்திற்குரியவை

உலகம் தந்தவை-ஆனந்தம் தரவில்லை-உலகம்
அறியாத உண்மை, உயர்ந்த நம் உறவின் தன்மை
என் ஆனந்தம் நீயே-என் அன்பும்,
என்னை அன்பு செய்பவனும் நீயே

மாறிடும் உலகில் மாறாதது உன் அன்பு ஒன்றே
இருள் சூழ் உலகில்-என்றும் என் ஒளி நீ
என் சிறுவாழ்வும் உன்தன் பெருவரமே

உன் அன்பே உயிர்தரும் வாழ்வு
உன்தன் அமைதியில் நான் வாழ
உன் பிரசன்னம் என்னைச் சூழட்டும்.

7

வாழும் இறைதன்மை என் வாழ்வாகட்டும்
என் வாழ்வின் முழுமை நீயே
இன்ப, துன்பமும், கண்ணீரும், புன்னகையும்,
என்தன் காணிக்கை, இருமை கடந்து
உனைச் சேர அருள் தருவாய் அப்பா

உன் பிரசன்னமே உண்மையின் தரிசனம், ஆன்மாவின் ஆனந்தம்
பிரபஞ்ச உணர்வில் பேதங்களில்லை வாழும் இறைவன் நீயே
உண்மையிலும், ஆவியிலும் உன்னைத் தொழுது அறிந்திட அருள்புரி
உன் சித்தம் அறிந்து, உன் பாதையில் நான் நடக்க
உன்னைச் சரணடைந்தேன், கருணை காட்டு

8

எல்லோரும் இறை குழந்தைகளே
உன் அன்பைச் சுவைத்திட ,என் அக இருள் மறைந்திடும்
என் அடைக்கலம் நீயாகிட, அமைதி, ஆனந்தம் என் சொந்தம்.
உண்மையே நீ, உண்மையே விடுதலை தரும்
நிரப்புவதும், நிறைவாக்குவதும் உண்மையில் நீயே

9

நீயே என் ஆனந்தம், உன்னால் எனக்குப் புது உதயம்
கலங்கிய என் இதயத்திற்கு புத்துணர்வாய் உன் பிரசன்னம்
ஆனந்த நீராடலில் என் சோர்வு நீங்குகின்றது.
உன்கருணைதான் என்னே?

என்றும் உண்மையின் தரிசனத்தில் வாழஅருள்புரிவாய்
இறைமகன் நான் என்ற உணர்வே என் பேரானந்தம்
பணி வாழ்வால், அன்பால் நான் உன் சாட்சியாகின்றேன்
அன்பும், புனிதமும், அமைதியும் என்னை ஆளட்டும்.

10.

நீ இல்லாத கூட்டத்தில் என் மனதை வாட்டும் தனிமை-
நீயிருக்கும்போதோ தேனாய் இனிக்கும் என் தனிமை
உன்னோடு வாழ்பவனுக்கு தனிமை ஏது?
என் தவமாய் -வரமாய் நீ

எங்கும் நீயே-எல்லாம் நீயே
அனைத்திலும் அனைத்துமாய் உன்னைக்
கண்டு இன்புற என் இதயத்திற்கு ஒளி கொடு
நீயே என் பலம் நீயே என் உத்வேகம்

11.

தந்தையே உன் அழைப்பிற்கு செவிசாய்க்க
விழிப்புணர்வை அருள்வாய்
அதிகாலையில் என்னை அழைக்கும் சத்தம்
பூபாளமாய் கேட்டிட புளாங்காகிக்கும் மனம்

என் செவிப்புலன் நோக காத்திருந்தேன்
என் மனம் தன் இறகுகளை விரித்தும் பலனில்லை
உன்னைச் சரணடைந்தேன், நீயோ ஒரு பரம இரகசியம்

ஏன் அழைத்தாய் சொல், உன் சித்தமறிய
ஆவலாய் உள்ளேன்
என் இதயமே உனக்குக் காணிக்கை,
உன் அன்பே என்தன் அருள்நிதி

எல்லா உயிர்களினும் வாழும் தெய்வமே
விழிப்புணர்வை வரமாக்கு, மாறிடும் நிலைகளில்
மாறாத உன் அன்பு என் கப்பலின் நங்கூரம்

முழு ஆன்மாவோடும், இதயத்தோடும், அறிவோடும்
உன்னை அன்பு செய்தலே என் வாழ்வு
சக்தி கொடு, தளராத விசுவாசம் கொடு.

12

புரிந்துணர்வால், அறிதலால் தோன்றும் உண்மை
எனக்கு விடுதலை அருளட்டும்
என் இதயமே உன் அரியணை, மனத்தாழ்ச்சியே படிக்கற்கள்
நம்பிக்கை மூலைக்கல், பிரார்த்தனை என் தூபம்
இரவு பகலாய் ஒளிரும் என் வாழ்வே உனக்கு தீபம்.
வந்து என் இதய அரியணை அமர்வாய் அப்பா

உன்னை காணாதபோதும், கலங்காத என் மனதில்
நம்பிக்கை, என் பணிகளால் உன்னை துதிக்கின்றேன்
ஒவ்வொரு நாளும் உன் அருள் வரமே,
என் பணியும் நீ தரும் ஆசீரே-உனக்காய்
வாழ்தலும், அயலவரை அன்பு செய்தலும் ஒன்றே

புரிதலின் ஞானத்தை அருள்வாய், உறுதியான மனம் கொடுப்பாய்
உன் பாதையில் நான் நடக்க, என் சிலுவையை நான் சுமக்க
வலிமை தருவாய், என் இதயத்தில் என்றும் நீ
உன் சித்தமே என் சித்தம்
சகல உயிர்களும் நலமாய் வாழ என் பிராத்தனை

13.

உள்ளக் கோயிலின் காவலாளி நான்
விழிப்போடும், உண்மையோடும் என் காவல்
காத்திருத்தலுக்கு காலமில்லை, நேரத்திற்கு முடிவில்லை
எவ்வளவு நேரம் என்பது என் இலக்குமில்லை
காத்திருத்தல் இலக்கல்ல
ஆயினும் விழிப்போடு காத்திருக்கின்றேன்
காலத்தில் என் ஆன்மா கனியும்

வீரமும், விவேகமும், தளராத நம்பிக்கையம்,
தன்னலமற்ற விருப்பும் என்னுள், எதிர்ப்பில் அச்சமில்லை
தோல்வியில் மனச்சோர்வில்லை, இருள் நிறைந்த கணங்களில்
என் விசுவாசமே ஒளி, என்னை மறந்து உன்னை தேடுகின்றேன்
உன் திருச்சமூகத்தில் வாழ வரம் கொடு
என் சொல், செயல், சிந்தனை எல்லாம் என் அர்ச்சனை

என் இதயத்தை இருள் நீக்கி தூயதாக்கு
உன் உண்மையுள்ள சேவகனாய் என்னை மாற்று

14

உன் வாசல் படியை நான் அனுகும்போது
உண்மையை இறைவா நான் அனுகுகின்றேன்
உன்னத பேரின்பத்தை அறிகின்றேன்

ஆன்மீக தாகம் என்னை நிறைக்கட்டும்
அனைத்து உடல் தேவைகளும் மறையட்டும்
உலகமெல்லாம் சொந்தமானாலும்
மெய்யான அமைதி உன்னிடமே
ஆழத்தை, முழுமையை தேடும் உள்ளம்
ஆன்ம தரிசனம் காணட்டும், அங்கே நீ

நம் உடமைகளும், உறவுகளும் கானல் நீரே
என்னுள் வாழும் நீ என்னை அறிவாய்
உண்மை ஆனந்தம் உலகத்தில் இல்லை,
உன்னில்தான் உண்மையின் அமைதி
எங்கும் நீயே , எல்லாம் நீயே

என் இருப்பும் நீயே-என் உன்னத அடைக்கலம் நீயே
என்னே என்தன் ஆனந்தம்
உண்மை வேட்கை என்னுள் பொங்கட்டும்
அன்பினால் உன்னை அடைய அருள்புரி
எளிய மனதை- தளராமல் ஜெபிக்கும் நம்பிக்கையை
வரமாக்கு, சச்சித்தானந்தம் நீ

15

பரபூரண சரணாகதியே விழிப்புணர்வு
நான் அழிந்து நீயாகும் அழகு
நதி மறைந்து கடலாகும் நிகழ்வு

அன்பினால் என் இதயத்தை அலங்கரித்து-நீ
அமர உனதன் அரியணையாக்கினேன்-வந்தமர்ந்து
என் வாழ்வை வளமாக்கு, உன் இருப்பை நான் புரிந்துணர
என் அறியாமை இருளை நீக்கு
சாந்தி தரும் நின் சந்நிதி, என் இதயத்திற்கு நிம்மதி

16

ஆணவமனதில் அமைதியில்லை
ஆணவமே நீ அருளும் அமைதிக்குப் பெருந்தடை
பரிபூரண சரணாகதியேயே அமைதிக்கு வழி

நான் எனும் சிறு நிலை கடந்து
உன்னைச் சரணடைய அருள்புரி
என் இதயம் அமைதியால் நிறையும்.

ஆணவமழிமழிந்த-புதிய
குழந்தையாய் பிறந்திட அருள்தா
உன் தூய ஆவியால் என்னை அபிஷேகி
உன் சித்தம் என் சித்தமாகும்.

18

எளிய உள்ளமே உன் ஆனந்த இருக்கை, அரியணை,
ஏழையர் உள்ளமே நீ வாழும் பெருங்கோயில்

19

உன்னைத் தொடும் விசுவாசத்தை எனக்கு அருள்வாய்
உன் தொடுகையால் பார்வை பெற்றேன்
எங்கும் நீயே எல்லாம் என உன்னைக் கண்டு
ஆனந்தமுற்றேன் என்னே நின் கருணை

20

மண, பொன், பெண், புகழை விரும்பாது
உன்னை விரும்பிட அருள்தா
இருள் நிறைந்த என் பாதையில்
நீயே என் ஒளி

21

நீரோடை தேடும் கலைமனாய் என் இதயம்-
வரண்டு உனக்காய் தவிக்கின்றது
என் நினைவுகள் தூபமாய்
உன்னனைச் சேர என்னை ஆட்கொள்

22

எதிர்ப்பில்லாமல் வெற்றியில்லை
என் மனம் சோர்வுறும் போதெல்லாம்
என்னைத் தேற்றும் தாய் நீ
என் பலமும், என் அரணும் நீ

23

என் ஆணவத்தை தகனப்பலியாக்கு
ஆணவம் கழிந்த மனமே உன் ஆனந்த இல்லம்
என் வாழ்வு உன் ஒளியால் ஒளிரட்டும்
உன் அமைதியே ஒப்பற்ற பெருநிதி

24

என் வாழ்வும், என் அன்பும் என்றும் உனதாக
என்னை ஆட்கொண்டு அருள்புரி

என் சுயநலத்தை அழித்து உன் அன்பனாய்
என்னை மாற்று-என்றும் உன் அடிமை நான்
உன் சித்தம் என் சித்தம்-என்னே இன்பம்

25

உன் கருணைதான் என்னே! நீ தந்த வரங்கள்
பெரிது, ஆனந்தப் பேரமைதியை,
போதும் என்ற மனதை தந்தாய்
என் தந்தையே நன்றி

26

ஓயாது ஒலிக்கும் பிரபஞ்ச கானத்தில்
நல்லதோர் வீணையாய்-நானும்
இசைமீட்க கற்றுக்கொடு

27

பற்றே சிறை-பற்றறுத்தவன் இறக்கை விரித்து
வானில் பறக்கும் வண்ணப் பறவை
ஞானத்தின் வழியில் நாளும் என்னை வழிநடத்து
குழந்தையுள்ளத்தை வரமாய் அருளு
உன் ஒளி என்னில் ஒளிரட்டும்.

28

என் உள்ளக் கதவைத் திறந்து-உன் சந்நிதி
வந்திட வரம் தா, சஞ்சலம், கவலை, சந்தேகம்,
துக்கம், சோர்வு, சோம்பல் கடந்து
அப்பா உன் சந்நிதியில் இன்புற அருள் தா

29

உண்மைக்கு ஊன்றுகோல்கள் எதற்கு?
உண்மைக்கு முட்டுக்கால்களும் ஏனோ?

30.

நாளும் புது மலராய், நான் மலர்ந்து
மணம் வீச-கதிரவனாய்
ஆணவஇருள் நீங்கி ஒளி கொடு

31

உடைந்த உள்ளமே உனக்கு காணிக்கையாக
ஆணவம் கழிந்த மனம் ஆகுதியாக
என் வாழ்வு வேள்வியாகட்டும்

அலையும் கடலில்-ஆடும் படகாய் என் பயணம்
நீயே என் திசையறிகருவி, வானம் சீறிச் சினந்தாலும்
கடல் கொந்தளித்து குமுறினாலும்
காற்று புயலாய் மாறினாலும்
உன்னைச் சேரும் என் பயணம், ஒருபோதும் ஓயாது

எல்லையில்லாப் பேரன்போடு, எல்லாமுமாய்
எல்லாவற்றிற்கும் மேலாய்-உன்னை
அன்பு செய்ய அருள் தா,
உன் அன்பிற்குத். தடையாய் உள்ளதெல்லாம்
நான் இழக்கவும், மறக்கவும், இன்முகத்தோடு
துறக்கவும் வரம் தா-இதுவே என் ஜெபம்

நீயே என்தன் பெருநிதி-மனம்
தேடும் அமைதி உன் சந்நிதி

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-23-08-2023

# அன்பே சிவம்

---

அன்பே தெய்வம் என்றால் ஆலயங்களும், வேதங்களும் எதற்கு?
விவிலியமோ, அல் குரானோ கிரந்தமோ, ஆரம்பப் பாடங்களே
கற்றுக் கொள்ள அன்பு பாடமல்ல-மூளையின் மொழியுமல்ல
அன்பு அனுபவம், இதயத்தின் மொழி

அன்னையும், பிதாவும் முன்னறி தெய்வங்கள்
அன்பின் ஆரம்பப் பள்ளி வீடே
வீடு பேறடைதலே வாழ்வின் முக்தி
அறம், பொருள். இன்பமே வீட்டிற்கு வழி

ஆஸ்திகன், நாஸ்தீகன் , இறைவனை அறியமுடியாதவன் என்ற
வேறுபாடுகள் அன்பிற்கில்லை, அன்பை பகிர்ந்த நல்ல சமாரித்தனுக்கு
வேதங்கள் தெரியவில்லை, திருச்சட்டங்களின் அறிவோ இல்லை
இதயத்தில் இருந்ததெல்லாம்-இரக்கமும், கருணையுமே

சாதியம் கடந்து அன்பைப் பகிர்ந்து அன்பிற்கு
சாட்சியமான மனிதன், சடங்கு, வேதம், திருச்சட்டம் கடந்து
உண்மை இறைவனை அன்பால் தொழுத புனிதன்

புனித வெள்ளி- சத்தியத்திற்காய் சான்று பகிர்ந்த உத்தமர்
அவலமாய் மரித்த நாள், உண்மைக்கு சாட்சியமாய் நாம் வாழ
தம் பாடுகள். இறப்பினால், மனுக்குலத்திற்கு
மனுமகன் அழைப்பு விடுத்த நாள்
தனி மனித மதக்கிளர்சியாளனின் புரட்சி நாள்

நம் பாவங்களுக்காக இயேசு மரித்தார் எனப் புலம்புவதை விடுத்து
சத்தியத்திற்கு சாட்சியமாய் வாழுங்கள்: கிறிஸ்துவனாய்,
பௌத்தனாய். இந்துவாய் இஸ்லாமியனாய், யூதனாய்,
சீக்கியனாய்ப்  பிரிந்து வாழாமல்
கிறிஸ்துவாய், புத்தராய், கிருஷ்ணனனாய்
விழிப்புணர்வில் வாழ, இயேசு விடுத்த அழைப்பின் நாள்

பொதுவுடமைச் சமத்துவ சமுதாயம் மலர கனவு கண்ட கார்ல் மார்க்ஸ்
போதையும், அபினியுமாய் மதங்கள் என்றார்-அனல் ஹக் என
உண்மைக்கு சான்று பகிர்ந்த மன்ஸூர், தம்மில் இறைவனைக் கண்டார்

சத்தியமே தெய்வம் என வாழ்ந்திட அரியணை இழந்து,
தன்னையும், மனைவி மகனை அடிமைகளாய் விற்று
சுடுகாட்டில் காவலனாய் நின்ற மன்னன் அரிச்சந்திரன்
உண்மைக்குச் சான்று பகிர்ந்த அகக்கிளர்ச்சியாளர்

தெய்வமே சத்தியம் என வாழ்வைத் தொடங்கி
சத்தியமே தெய்வம் என அனுபூதியில் காண
வாழ்வை சத்தியசோதனையாக்கிய
மகாத்மா காந்தி, சத்திய யாத்திரீகனானார்

உண்மைக்குச் சான்று பகிர்தலே தெய்வீகம்.
அன்பினால் தம்மை மானுட சேவைக்கு
அர்ச்சனையாக்குதலே உயர்ந்த காணிக்கை

அன்று தொடங்கிய மதப்போர்கள் இன்றும் ஓயவில்லை
அன்பே சிவம் என்பதற்கு மதங்கள் சாட்சியமாயில்லை
மதவெறியே இயேசுவைக் கொன்றது

அன்புதான் கடவுள்! உண்மைதான் வேதம்.
கபீரும், இராமகிருஷ்ண பரமஹம்சரும்
புதிய பாதையில் நடந்தார்
லாவோட்ஸீ இயல்பான மனிதனாய் வாழ்ந்தார்

ஆணவம் தகர்ந்திட தூய மனமாய் நாம்
அஹம் பிரம்மஸ்மி-தத்துவமஸி, அனல் ஹக்,
நானும் தந்தையும் ஒன்றே
சச்சித்தானந்தம் நம் மெய்யிருப்பு

நாம, ரூபமற்று நிர்வாணியாய் பிறந்தோம்
நாம, ரூபம் கொண்டு அறிவுக்கனி உண்டு
ஆசைகளின் வழியே ஊதாரியாய் அலைந்து
அறியாமையால் மதங்களைப் படைத்தோம்

புத்தி தெளிந்து என் சித்தம் அன்று
நின் சித்தம் என்றால்-கிறிஸ்துவாய் நாம்.
ஏற்பதும், மறுப்பதும் மானுடா உன் சுதந்திரம்
உண்மையே மெய்யான சுதந்திரம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-2.4.2021*

# அன்பின் வேதம் காதல்

---

ஆதாமின் தனிமை துயர் நீங்க,
இறைவன் கொடுத்த காதல் வேதம் ஏவாள்
மாது உளம் கனியக் காதல் கொண்டு
மாதுளம் கனியாய் உண்டு காதல் பசியாறி
உள்ளங்கள் ஒன்றாகி ஒருமையில் இன்புற்றிருக்க
இறைவன் ஈந்த அருள்வரம் இல்லறம்,
படைப்பின் புதிய கர்ப்பகிரகம்

கன்னிமகளும்-கடவுளைப்போலாகிட
நன்மை தீமை அறியும் கனியைத் தேர்ந்தாள்
தானுமுண்டு தன் துணைவனுக்கும் ஈந்தே
இருவரும் ஏமாந்தார்

காதலால் கரைந்தே அர்த்தநாரீஸ்வரனாகி
கடவுளைப் போலாகிட முடியாத அவலம்
விலக்கப்பட்ட கனியை உண்ட துயரம்.

எல்லாம் பொய்யாகிட
நிர்வாண அழகும் நிம்மதியும் பறி போயிட
நன்மை தீமை அறிந்த மானுடம்
"இருமைக்குள்" அமிழ்ந்தே துன்புற்று
தம்மை மூடிக்கொள்ள ஆடையாய் வாடும்
அத்தியிலைகளை சூடியது

காதல் கூட வேதம்தான், அம்மையப்பனாய்
அர்தநாரீஸ்வரனாய், மனிதன் கடவுளாகிட
இறைவன் கொடுத்த அன்பின் பாதைதான்
அறிந்தவர் யாரோ? தேர்ந்தவர் எவரோ?.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-14-07-2023

# அண்டமும் பிண்டமும்

---

அனலும் குன்றாத, ஒளியும் குறையாத-சூரிய
அக்கினி குண்டத்தை தொழுது பணிந்து சுற்றி வந்து ஆடும்
அழகு நங்கையராய் நவகிரகங்கள்.

λόγος

ஒளியைத் தொழுது, ஆடிக்களித்து
இரவில் உறங்கி இளைப்பாறி
இருமை அறிவை கடந்து இவர்தம் வாழ்வு

எல்லாம் மாறும் என்று சொல்லிச் சுழன்று
நில்லாமல் சுற்றும் உலகு-எதுவும் நிலையற்றது என்றிட
தன்னை நாளும் புதுப்பிக்கும் அழகு

ஒளியாலே மலரும் வாழ்வு-இருளிலே உறங்கும் இரவு
இருளும் ஒளியுமாய், யிங், யாங்  நம் உலகு

சக்தியும் சடமும், சூனியத்தில் ஆடும்
ஆனந்த தாண்டவமாய்ப் படைப்பு,
சத்தியும் சடமும் ஒன்றில் ஒன்றாகிப், பலவாகிப்
படைப்பாகிப் பேரானந்ததில் நிலைப்பு

பிரபஞ்ச பிரக்ஞை, தன்னைப் பகிர்ந்திட
ஆறு நாட்களாய்த் தொடர்ந்த படைப்பில்
ஆறறிவுப் படைப்பாய் பரிணாமமாய் மனிதன்

எல்லாம் அறிந்த, எல்லாம் வல்ல,
எங்கும் நிறைந்த சத் சித் ஆனந்தக் கருணையால்
ஏழாம் நாளில் எல்லாம் நிறைவு
முழுமையில் தோன்றியது முழுமையாகிட
எல்லாம் புதுமையானது

நிர்குண பிரம்மம் சுத்த சைதன்யமாய் இன்புற்றிருக்க
பிரக்ஞானம் பிரம்மம் -அஹம் பிரம்மஸ்மி
தத் த்வம் அஸி என்றே சகுணபிரம்மம்.
வார்த்தையாய் நின்று (LOGOS) ஓங்காரமாய் அதிர்ந்து
ஆணவத் தளை அவிழ்த்து தன்னை அறிந்து
தன்னைச்சேர மனிதனை அழைக்கின்றது

அறிவோ துன்பம்-அறியாத ஏழாம் அறிவோ
சூனியமாய், ஞானமாய், சுத்த சைதன்யமாய்
நிர்வாணப் பேரின்பமாய், மனமழிந்த தூய மனமாய்
கிருஷ்ண, புத்த -கிறிஸ்து மனமாய் காட்சி தந்து
எரியும் முட்செடியில்
சக்தியும் சடமுமாய் ஒளிர்கின்றது.

**இருப்பது நாம்** என்ற மெய்யிருப்பு
இருமை கடந்து மனம் அழித்து சரணடைந்து
தூய உள்ளுணர்வாய் உயர்ந்திட
இன்றும் அழைக்கின்றது.

அறிவுக்கனியால் நன்மை தீமை அறிந்து
பிளவுண்ட ஆணவ ஆதாம் மனம்
வெட்கி, ஒளிந்து, அத்தி இலை ஆடை உடுத்தி
குற்ற உணர்வோடு துக்கித்து
ஏதேன் தோட்டம் நின்று வெளியேறியது

சிலுவையில் தன்னை மறுத்து எல்லாம் நீயே
தந்தையே உம் சித்தமே என் சித்தம் எனச்
சரணடைந்த தூய இயேசு மனம்
கிறிஸ்து பிரக்ஞ்சையாய் மலர்ந்து மாட்சியுடன்
“ துன்ப வெளியில் நின்று” –“ இன்பவனம்” சென்று
முழுமையில் முழுமையானது
அறிவு தந்த ஆணவம் வீழ்ச்சியானது
அடக்கம் தந்த ஞானமோ-மீட்பானது.

உள்ளுணர்வில் உயர்ந்து இறை மக்களாய் மாறிடத்
தன்னைத் தாழ்த்தி, வையகம் வந்து வாழ்ந்து காட்டியது
வழியும், உண்மையும் வாழ்வுமான இறைவார்த்தை.
***உள்ளுணர்வின் அதி உன்னத நிலையே இறைவன்***
***ஆணவ மனமே கானகம்-தூய மனமோ இன்ப வனம்***
*Freedom from the mind is Peace*
தன்னை அறிந்து-மனம் துறந்த சரணாகதியே மெய்வாழ்வு
மெய்யறிவே நிர்வாணம்-மீட்பு

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-29-04-2023

# அஞ்சலி

வெள்ளமாய் சோகம் பெருகி, குருதி வியர்வையாய்
வழிந்தோடும் போது, உள்கசிந்து தேடும் மெய்ப்பொருள்
என் பொருட்டு காயமுற்ற நின் திருவடியே-அப்பா

கள்ளனாய், காமுகனாய் வாழ்ந்திட்ட எளியோனை
கரை சேர்க்க நீயுற்ற கல்வாரிப்பாடுகளை
சொல்லினால் வடிக்க அடியேன் சிற்றறிவு போதுமோ
போதாதே பெருமானே என் அம்மானே.



உன்னை மறப்பதென்பது என் இறப்பே-
உன்னை நினைப்பதென்பது என்றும் புதுப் பிறப்பே.

# வேண்டுதல்

அழுது சிவந்தவிழிகள் களிப்படைய வேண்டும்
தொழுது பணியும் உள்ளம் தூய்மை பெறவேண்டும்
விழுதுகள்போல் என் விசுவாசமும் வளர்ந்து
உன்னில் வேரூண்ட வேண்டும்-உழுது பண்பட்ட
என்னுள்ளத்தில் வித்தாய் உன் வார்த்தை விழுந்து
நூறு மடங்கு பலன் தரவேண்டும்

காணத்தவமியற்றி கண்களில் நீர் வடிய
வானத்தவனை மனம் நிறுத்தி மையலூற்று
ஊனப்பிண்டம் ஓதும் அன்பு மந்திரம்
மோனத்தவமிருக்கும் மெய்யவனை எட்டாதோ?

ஊனுடல் நீங்கி உன்னோடு கலந்திடும்
மானுடன் என் திருநாள் எந்நாளோ?-வானவனே
ஈனப்பிறவி என்னையும் மறவாமல் இன்றே நினைப்பாய்
என்றும் விண்ணரசில் உன்னோடு வந்து வாழ்ந்திட

# அப்பா

ஓசையில்லா ஓங்கார உன்னிசையை என்னிதயம் கேட்கவேண்டும்
ஆசையறுத்து என்நெஞ்சு-அப்பா உன் அன்பை நாளும் சுவைக்கவேண்டும்
நேசமில்லா இதயங்களுக்கும்- உன் பாசம் நான் காட்டவேண்டும்
ஈசனென்றும், இறைவனென்றும் துதிக்குமுன்னை
அம்மையப்பன் என அழைத்து நான் மகிழவேண்டும்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-10-07-2023

# அன்பைத் தேடி

---

அன்பைப் பகிர்ந்து நிலை வாழ்வு அளிக்க வந்த
இறை மகனுக்கோ சிலுவை மரணம்
ஞான வழி காட்டிய புத்த பெருமானுக்கோ
நாஸ்தீகன் என்ற திருநாமம்.

யுத்த மேகங்கள்-குண்டு மழை பொழிய
சாம்பல் மேடுகளாய் மாறிடும் ஊர்கள்
மங்கலம் கலைந்து-குங்குமம் அழிய
கண்ணீர் தவமியற்றும் தாய்க்குலம்

(அழுகைச்)) சுவர் நோக்கி தொழுபவர்களும்
(க.ஃ.பா) திசை நோக்கி தொழுபவர்களும்
(தெய்வச்)சிலை நோக்கி தொழுபவர்களும்
உள்ளோக்கி-உண்மையிலும், அன்பிலும் தொழுதால்
உலகில் அமைதி பிறக்குமே-உள்குவதும் அமைதியானால்
நல் உள்ளமும் இறையில்லமாகும்
நாமும் சச்சித்தானந்தம் மெய்யறிவு தோன்றுமே

அல்லாகு அக்.ஃ.பர் என முழங்கி ஐவேளை தொழுதென்ன
நீறும், நாமமும், குல்லாயும், சிலுவையும் தரித்தென்ன
அன்பில்லா நெஞ்சங்கள்-தொழுதும் பயனில்லை
உண்மையை அனுபூதியில் அறியாதார்-தவமிருந்தும்
அமைதி வரமில்லை-வாழ்வில் ஆனந்தமில்லை

அமைதியில் அமர்ந்த பெருமான் புத்தரும்
அமைதியை அருளிய இறைமகன் இயேசுவும்
தீமையை எதிர்க்காதீர்கள் என்றார்- குருஷேத்திரத்தில்
கீதை சொன்ன கண்ணணோ தீமையை அழித்தார்
கான மழை பொழிந்தே -வாழ்கை
ஆனந்த விளையாட்டு என்றார்

பாதைகள் வேறு, பயணிகள் வேறு-ஆயினும்
சேருமிடம் ஒன்றே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-16-06-2023

# அன்பின் பலி

அள்ளியணைத்து, கொஞ்சி மகிழ்ந்த ஆசைமகன்- தோளில்
கொள்ளி சுமந்து வர, அன்பு மகன் வரும் பாதையில்-
கல்லும், முள்ளுமகற்றி ,ஆசைதீர பெயர் சொல்லியழைத்து
முன் நடந்த தந்தை மனதிலோ சோக வாள் பாய்ந்த துன்பம்





வெள்ளி நரையும், மேனி தழுவிய திரையும் மூப்பு பூத்தது
இப்போது என்று மெய் சொல்லிட, நடை தளர, மெய் சோர
துள்ளிவரும் சோகக் கண்ணீருக்கு கையணை கட்டி
கொல்லாமை நோன்பினைக் கொன்று முடித்திட- தள்ளாமை
தழுவிய நெஞ்சைத் தாங்கி தள்ளாடி நடந்த தந்தை

என்னுயிர் மகன் இறந்த கணம் என்னுயிரும் போகும்-
இவன் தாய் உயிரோ கண்மணியும், காவலனும் மடிந்த சேதி
அறிந்த மறுகணம் போகும், மாதவனே நீ கேட்டதோ
என்னுடமையன்று, உன்னுடமையே
இரப்பதும், மருள்வதும் ஏங்கி அழுவதும் என்னுடமையே,
சொந்தமென்று சேர்த்த மானுடன் சொத்துரிமையே,
பிழை பொறுப்பாய் என்றே உள்ளத்தே வெம்பி அழுத தந்தை

கொள்ளியும், நெருப்பும் எம்மிடமுண்டு கொன்று பலியிட
உயிர்ப்பொருள் ஒன்றுமில்லை, துள்ளிடும் செம்மறியில்லை,
தூரப் பறக்கும் வெண்புறாக்களுமில்லை? செல்லமகன் வினவிட
எல்லாம் வல்லவர் தருவார், எமக்கு எல்லாம் அவர்தான்
கண்ணில் நீர் ஒளிர, மறுமொழியில் சோகம் ஒளிய.
நல்லவர் இருக்க நமக்கு கவலை எதற்கு என்றார் தந்தை



உள்ளமெங்கும் சோக வெள்ளம் பாய்ந்திட-ஒளியிழந்த
நீலவிழியிரண்டும் நீர்மாலை கோர்த்து வற்றிக் காய்ந்திட,
கல்லெடுத்து பலிப் பீடமமைத்து, விறகைப் பரப்பி,
அள்ளியணைத்து ஆசைதீர மகனை முத்தமிட்டு
பீடத்தில் மெல்லக் கிடத்தி சொல்லிமாளாத் துயரத்தை
நெஞ்சுக்குள் அடக்கி- வல்லவர் கட்டளைக்கு உள்ளம் பணிய
ஓங்கினார் கத்தியை ஒரு தயக்கமுமின்றி-உயிர் பலியாய்
தன் மகனை கொடுத்திட விசுவாசத்தின் தந்தை ஆபிரகாம்

தந்தை துயரை தம் துயர் என கண்ட வானவனும்
ஊனிட்ட உறவின் நெகிழ்வில் உள்ளமுருகிட
சிந்தை பணிந்து ஐயன் புரிந்த அருந்தவம் புகழ்ந்தே
இன்மகன் உயிரை ஈந்தார் வரமாய்



நின்றதோ நரபலி நினைவை நிறைத்ததோ நிம்மதி
வானின்று கேட்டதோ புகழ்மொழி நெஞ்சுருக
தந்தை இசைத்ததோ வாழ்த்தொலி

தன்னிலை உணரச் செய்தார்-கொண்ட புத்திர பாசம்
இறையன்பிற்கு தடையென மண்ணவர் அறியச் செய்தார்-
பற்றற்றான் பற்றினை புற்றறுத்து பற்றிட
பாடம் புகட்டவும் செய்தார் பரமன்

நரபலியால் நாறிட்ட போலித் தெய்வங்களை ஒதுக்கி
அன்பே சிவம் என அறியத் தந்த இறைவன்
புத்திர பாசம் இறை அன்பிற்கு- எத்தனை
பெருந்தடை என அனுபூதியில் பரியவைத்த ஈசன்



**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-10-07-2023*

# அதிகாரம் மதவாதம்

---

**கி.பி.**1505-

வானும், கடலும் வண்ண நீலம் காட்ட, வந்து மோதும் காற்றில்
புடைத்த பாய்களும் நாவாயின் வேகத்தை கூட்ட
ஆழ்கடலில் அசையும் நாவாயில் நாடு தேடும்
கொள்ளைக்காரப் பறங்கி லோறன்ஸ் சோ டீ அல்மெய்டா





துளித்துளியாய் வீழ்ந்த மழைத்துளிகள் பெருந்துளியாய் மாறிட
வண்ணம் மறைந்து வானம் கருமேகம் சூடிட
இடியும் மின்னலும் மழையும் ஒன்றாய் கூடி நர்த்தானமாடிட
எழுந்த புயல் புடைத்த பாய்களை கிழித்திட
பாதை மாறிய கரை ஒதுங்கிய நாவாய்



ஆண்ட பரம்பரை அடிமையாக, அந்நிய பரம்பரை
அரியணை அமர்ந்திட புயல் ஒதுக்கிய கடற்குப்பை
ஈழவரலாற்றை மாற்றி எழுதிய பெரும் புயலானது-அந்நியருக்கு
ஈழமும் நானூறு வருடங்களுக்கு மேலாக அடிமையானது.

கறுவா, கராம்பு, ஏலம், மிளகு வாசனைத் திரவியம்
வாங்கிடும் வணிகனாய் நாடகமாடி -வஞ்சகமாய்
நாட்டைச் சூறையாடிய பறங்கியர்
நளினமாய் மதம் மாற்றம் செய்த பாதிரிமார்

சாதியக் கொடுமைகளுக்கஞ்சியவரும், சலுகைக்காய்
தன்மானத்தை விற்றவர்களும் மதம் மாறிட
ஆன்மீகமும் வியாபாரமானது
நாட்டை அடிமை கொள்ளலும் மதமாற்ற
பாதிரிகளுக்கு புனித வழியானது?



பறங்கி. டச்சு, பிரித்தானியர் என அந்நிய கிறிஸ்தவர்
சுதேசிகள் எம்மைப் பிரித்தாள -மதம் பஞ்சதந்திரம் கடந்த
ஆறாம் தந்திரமானது, இறை தேர்ந்த இனம் இஸ்ராயேலர் இருக்க-
இறைமை இழந்து அடிமையாய் நாம் வாழ இன்னோர் இனமும்.
நாடும் அன்பு இறைவனுக்கும் ஏனோ? நாடு தேடும்
இறைவனும் கொள்ளைகாரன்தானோ?

சீசருக்கு உரியதை சீசருக்கும்
கடவுளுக்கு உரியதை கடவுளுக்கும்
செலுத்துங்கள் என்கிறார் இன்றும் இயேசு

யூதருக்கு வழங்கிய வேதமும், கட்டளைகளும்
யூத கடவுளும் யூதருக்கே என்றாக
நமக்கெதற்கு மாற்றார் தேவன்
நமக்கெதற்கு நம்மைத் தெரியாதவர் வேதம்





ஆய்ந்தறியாமல், அந்நியரால் என் முன்னோர் மதம் மாறிட
மாறிய பாதையில் என் தோளில் மதம் ஏறிட-
எல்லாம் துறந்து-அத்தியிலை களைந்து
அக நிர்வாணம் அறிந்திட-ஆதாமாய் மாறிட
ஏதேனை என்னுள் தேடும் பயணம் இன்று

அன்பும் உண்மையும், விழிப்புணர்வும் அகவழியாக-அறவழியாக
மதவாதம் பிணவாடையாய் நாறி பிரிவினை வளர்த்திட
பாப்புவுக்கும், பாதிரிக்கும் அடிமையாகி, நான் புரியாத
இயேசுவின் கொலைக்கு நானும் உடந்தையாகி-பாவியாகி
அறியாத மீட்பை உரிமையாக்கிட-அஞ்சி வாழ்தல் ஆன்மீகமா?

சத்தியம், தன்னுணர்வடைதல், போரானந்தம்
ஒரே உண்மையின் மூன்று முகங்கள்.
ஒரே சமயத்தில் மூன்று வழிகளில் வெளிப்படும்
மகத்தான ஒரே ஆற்றல்-
சத்தியம், சிவம், சுந்தரம் முப்பரிமான இறைநிலையை
தந்தை, மகன், துாய ஆவி என்றும்
பிரம்மா, விஷ்னு, ருத்திரன் என்றும்
மும்மூர்த்திகளாக்கிய அஞ்ஞான மதங்கள்





சத்தியத்தில் நம் நிரந்தரத்துவத்தை நாம் உணர்ந்திட-
ஆழ்நிலையில் தன்னுர்வு நிலை அடைந்திட
எல்லாம் ஒளி மயமாகிட-உணர்தல் நிலையில்
உணர முடியாதது ஏதுமில்லை என்றாகிட-
தன்னுர்தலின் சுடராய் நாம் மாறிட
இன்னும் ஆழத்தில்-“உள்’” ளை உணர்ந்திட
ஆதியந்தமாகிய பேரானந்தம்.-ஓஷோ

சிலுவைப்போர்கள் சிந்திய குருதியால்
மத்திய கிழக்கும் சிவந்திட
நாடு பிடிக்கும் வெள்ளை கிறிஸ்தவர்களால்
உலகின் பல நாகரீகங்கள் அழிந்திட
இஸ்லாமியப் பயங்கரவாதம் அமைதியைப் பழித்திட
மதவாத மதங்கள் ஏனோ?
உலக அமைதி இன்றும் கேள்விக்குறிதானோ?

மதம் போதையும் அபினியுமாக
மதவாதம் பயங்கரவாதமாக
உண்மை அன்பும், விழிப்புணர்வும் எங்கே?

கடவுள் என்று ஏதுமில்லை
கடவுள், சாத்தான் செல்லாக்காசின் இரு பக்கங்களாக-
மதக்கருத்துக்களின் சொல்லாடல்கள் இங்கே



தேசப்பற்றாளர்களாய் பிக்குகள்
தேசத்துரோகிகளா பாதிரிகள் புரிந்தவர் அறிந்தார்



அடிமை நுகமாய் இன்றும் தொடரும்
அந்நிய அடிமைத்தனம் குத்திய
அழியாத பச்சையாய் கிறிஸ்தவம்?

சத்தியம் சிவம் சுந்தரம் நீயே
எல்லாம் உனக்குள்ளே.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-10-07-2023*

# அவதார புருஷர்கள்

கண்ணனின் வேனுகானம் காற்றில் மிதந்து வர
காடும், மலையும், நதியும், இன்னிசையில் இசைந்தாட
வாழ்வின் இருமை கடந்து, ஏற்பு. மறுப்புக் கழித்து
ஆம் என்று இன்முகத்தோடு பதிலளித்து-வாழ்வை
விளையாட்டாக்கிய அவதார புருஷன் கண்ணன்






கோபிகைளோடு குதுாகலத்தோடு நடனமாடிய
ஆண்மகன், பல்லாயிரம் பெண்களுக்கும் -தன்னை
கணவனாய் ஈந்த தெய்வீக புருஷன்

எதிரி நண்பன் பேதம் கடந்து படைகளை கெளரவருக்கும்-
தன்னை பார்தனுக்குச் சாரதியாகவும் அர்ப்பணித்து
மனம் குழம்பிய நண்பனுக்கு -குருஷேத்திரத்தில்
கீதா உபதேசம் செய்த ஞானகுரு

வேயங்குழல் அவன் இதழ்களில் வேணுகானமிசைக்க,
மனிதன் வெற்றுப்புல்லாங்குழலாகி
தன்னிடம் பூரண சரணாகதியடைந்தால்-வாழ்வே
வேனுகானமாகும் என அழைப்பு விடுக்கும் அற்புதன்.

எது நடந்ததோ, அது நன்றாகவே நடந்தது
எது நடக்கிறதோ, அது நன்றாகவே நடக்கிறது
எது நடக்க இருக்கின்றதோ அதுவும் நன்றாக நடக்கும்
இராஜயோகத்தின் பரிபூரண சரணாகதி அவன் இன்னிசை
துறவு பூணாத தேவ சந்நியாசி-கண்ணன்



மனைவி, குழந்தை, மணிமுடி, மாளிகை துறந்து-வாழ்வை
ஞானத்தேடலாக்கிய சித்தார்தன்-ஞானம் கண்டு-
அமைதியில் நிலைத்த பெருமான் புத்தர்

அட்டாங்க மார்கமும், பஞ்ச சீலமும்,
தம்ப உபதேசமும், நல்வாழ்விற்கு போதனையாக,
கடவுள் அறியமுடியாதவர்
உன்னை நீ அறிந்தால் உனக்கு நீயே இறைவன்
புத்தரை தெருவில் கண்டால் கொல்லுங்கள்
புத்த நிலை ஒவ்வொரு மனிதனுக்குள்ளும்
என்ற ஆன்மீகப் புரட்சியாளர்

உண்மையை உணர்ந்தறியுங்கள், நான் சொன்னேன்,
முன்னோர் சொன்னார், வேதங்கள், பாரம்பரியம்
சொல்லியது என்பதால் நம்பவேண்டாம்
நீயே உனக்கு ஒளி-அப்போ தீப பவ
விழிப்புணர்வே விடுதலை என்ற மாமனிதன்



தொழுவத்தில் பிறந்து, நாடோடிப் போதகனாய் அலைந்து
ஏழை எளியோர் இறையரசைக் காண வழிகாட்டி
எதிரியையும் அன்பு செய்யுங்கள்
பலியை அல்ல இரக்கத்தையே இறைவன் விரும்புகின்றார்

இறைவன் நம் தந்தை, அப்பா என்று அழையுங்கள்
இறை மக்கள் நாம், இறையரசு நம்முள்ளே
உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்
உலகின் ஒளி நீங்கள்!, உலகின் உப்பு நீங்கள்



அன்பினால் சத்தியத்திற்கு சாட்சி சொன்னவருக்கு
சிரசில் முள்முடி-அங்கங்களில் ஆணி
சிலுவையோ மரணப்பரிசு



வாழ்வைத் துய்த்த இசைவாணன் கண்ணன்
செய்த புரட்சி கர்மயோகம், வாழ்வைத் துறந்து
ஞானம் கண்டவர் புரிந்த புரட்சி ஞானயோகம்
மனுமகனாய் உடலிலும், இறைமகனாய் உள்ளுணாவிலும்
வாழ்ந்தவர் புரிந்த புரட்சி பக்தி யோகம்

எல்லாம் இராஜயோகத்தில் நிறைவு கண்டது.

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
Pax Ravichandra-11-07-2023

# போதிமாதவ இயேசு கிறிஸ்து

---

மண்ணரசையும், மகவையும், மனைவியையும் துறந்த
இளவரசரும் ஞானம் பெற்று புத்தநிலை அடைந்தார்
தாம் பெற்ற இன்பம் பெறுக வையகம் என்றே தம்ம நெறி காட்டி
போதிமரத்தடியில் அமைதி பூக்க அமர்ந்தார்.

விண்ணரசை துறந்த இறைமகனும்-மனுமகனாய்
ஏழ்மைக் கோலம் ஏற்று தொழுவத்தில் பிறந்தார்.
முள்முடி தரித்த மன்னராய் சிலுவையில்
சத்தியத்திற்கு சாட்சியமாய் தம் உயிர் ஈந்தார்

ஞான வழியில் சென்றவரும், அன்பின் பாதையில்
தம்மை அர்பணித்தவரும் போதித்த
வழியும், உண்மையும், வாழ்வும் ஒன்றே
உலகு இவர்களை புரிந்துகொள்ளவில்லை
உண்மையை இன்றும் தேடத் துடிக்கவில்லை

புத்தநிலையும், கிறிஸ்து நிலையும் உள்ளுணர்வில் ஒன்றே
புரியாத மதவாதத்தால், மானுடம் பிளவுண்ட நிலை தீதே
போதிமரமும், சிலுவைமரமும், மத சின்னங்களாய் மாறிட
போதிமர நிழல்களில் அலங்காரப் புத்தர் சிலைகள்
கோயில் கோபுரங்களில் வெற்றுச் சிலுவைகள்

போதிசத்துவர் நிழலில்-நிம்மதி காண யாருமில்லை
இயேசு அளித்த அமைதியோ -இன்று
சீடர்களிடமும் இல்லை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-07-2023

# எரியும் முட்செடி-Burning Bush

---

ஆண்ட பரம்பரை மீண்டும் தன்
ஆளுமுரிமை பெறும் வரை-மறையாது
எம்மவர் அக்கினி நீராட்டம்.-மடியாது
எம்மவர் தாயகப் போராட்டம்

எரிநரகாய் வன்னி மாநிலம்-ஆயுதவாதிகளின
இனமோதலுக்குபுதிய பலிக்களமாய்
கிழக்கு மாநிலம்

இனவாதத்தீயால் ஏரிநரகாய் மாறிடும் ஈழத்தில்-
நாளும் பெருக்கெடுக்கும் குருதிக்கங்கைகள்
செந்நீர் வெள்ளத்தில் சிதையுண்ட உறவுகளின் சோகத்தை
கண்ணீர் வெள்ளத்தால் கழுவிடும் சொந்தங்கள்

கப்பம், ஆட்கடத்தல், கொலை, குண்டு வெடிப்பு
ஓயாத அலைகளாக, நாளாந்த நிகழ்வுகளாக
கண்ணீர்த் தவமிருக்கும் தாய்குலம்
தம்முள் போராடி மடியும் தமிழினம்

இங்கு காவல் நாய்களே மந்தையை
வேட்டையாடல் நீதியானது
அப்பாவிகளை தேடிக் கொல்லுதல்
ஏரோதுக்களின் வழிமரபானது.

உண்மைக்கு சாட்சியம் சொல்லாத
பொய்மையின் புதிய பரிணாமங்கள்
முத்தமிட்டு காட்டிக் கொடுத்தல்-சத்தமிட்டு
மறுதலித்தல் சம்பிரதாயங்கள்

இன்றும் உண்மைக்கு சாட்சி சொல்லும் உத்தமரைக் கண்டால்
அறிவாய் மானிட அவர்தான் உண்மைக் கிறிஸ்து
ஏனையோர் வெற்றுசிலுவைகளை கழுத்தில் தொங்கவிட்ட-
கறுப்புச் சந்தை வியாபாரிகளே.

மனித உரிமை மீறல்களை கண்டித்து
தூங்கும் மனச்சாட்சியை தட்டியெழுப்பும்
புதிய இறைவாக்கினராய் ஊடகத்துறையினர்

உண்மைக்கு சாட்சியம் சொல்லி
அஞ்சாமல் உயிர்த் தியாகம் செய்யும்போது
இவர்களும் புதிய கிறிஸ்துக்களே.
நீதியின் நிமித்தம் துன்புறுத்தப்படுவோர்
பேறுபெற்றோா-ஏனெனில் விண்ணரசு அவர்களதே.

எரியும் முட்செடியில் குளிர்காயும் புதிய மோசேக்களே
இறைதரிசனம் கிடைக்காத பரிதாபமும்
இறையச்சம் இல்லா புதுவேதமும் உங்களுக்கு

எண்ணெயில்லாத விளக்குகளோடு மனுமகனுக்காய் காத்திருந்து
தூங்கி வழியும் பேதைகளே-உங்களுக்கு
இறைமகனின் மறுவருகை-பவுல் காலத்திலிருந்து
தோன்றிய பழங்கதையாய் போனதென்ன?

கடவுளோ கோயில்களிலில்லை,
முனிவர்களின் காலடியில் இல்லை
சிலைகளில் செத்த வார்த்தைகளில் இல்லை
ஆலயங்களிலோ, மசூதிகளிளோ இல்லை

வெற்றுச் சடங்குகளில் இல்லை
வெறும் சத்த மந்திரங்களில் இல்லை
வேதங்களில் இல்லை-தேடு மனமே தேடு கடவுளை
கட உள்ளே-காண்பாய் கடவுள் நீ என்றே.

உண்மையைவிட மேலான தெய்வம் ஒன்றில்லை
உண்மையாய் வாழ்வதைவிட நிலையான வாழ்வு ஒன்றில்லை
செத்தபின்னர் நிலை வாழ்க்கை என்பவர் மூடர்களே
உண்மைக்காய் உயிர் கொடுப்பவர் வாழும் தெய்வங்களே.

உரிமைகளை பறிகொடுத்து-ஓயாத யுத்தத்தால்
உறவுகளையும் உடமைகளையும் இழந்து
உயிருக்காய் போராடும் ஈழத்தமிழர் துயர்கண்டும்-காணாமல்
குருவாய்-லேவியனாய் கடந்துபோகும்-திருச்சபையே
ஏன் இந்த அசமந்தபோக்கு?

சொத்தும் சொந்தமும் இழந்து ஏழையானோம்
அரிய சுதந்திரமிழந்து பிறந்தமண்ணில் அடிமையானோம்
கத்தும் கடலேழும் கடந்து அகதியானோம்
நித்தம் கண்ணீர் சிந்தும் அவல நிலைக்கானோம்.

எரியும் முட்செடியாய் டயர்கள்-அதில்
எரிபலியாய் உருகும் தமிழ் உடல்கள்
கரையும் வான்மழைபோல் விழிகள்-அதில்
கலந்து எதிரொலிக்கும் ஓயாத அழுகை ஒலிகள்

உண்மையே உன்னை மறுதலிக்கும்போது
சவமாகின்றேன் உன்மயமாகி உண்மைக்குச்
சாட்சியமாய் வாழும்போது -சிவமாகின்றேன்

அன்பே சிவம்
ஸத்தியான் நாஸ்தி பரோ தர்மா-
(உண்மையை கடைப்பிடிப்பதைவிட மேலான தர்மம் ஏதுமில்லை)

*There is No GOD higher than the TRUTH-Mahathma Gandhi*

*Love rejoices in TRUTH-St.Paul*

*Amicus Plato, sed magis amica veritas*
*"Plato is my friend, but truth is a better friend*
*(literally: Plato is friend, but truth is more friend*
*(to me than he is)." - Aristotle*

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-11-07-2023

# கல்வாரிப் பாதை

---------------------------------------------------

கண்ணீர்க் கங்கைகளும், குருதியாறுகளும் பொங்கிப் பாயும்
புதிய குருஷேத்திரத்தில் ஈழத் தமிழரின் இமயத் துயரம்
அநாதை, அகதிகளாகி உலகெங்கும் புலம் பெயர்ந்த அவலம்

காணமல்போன பிள்ளைகளோ போராளி
அப்பாவிகளோ-பேரினவாதப் பூதங்களுக்கு
எரியும் டயர்களில் நாளும் தகனப் பலி

" அச்சத்தில் இரத்த வியர்வை சிந்தும் பெற்றோரால்
இல்லங்களே "ஜெஸ்தமெனியான அவலம்
பூஸா, வெலிக்கடை சிறைகளே கல்வாரியாய் மாறிய
போராளிகளை நரபலி எடுத்த கொடூரம்

இயக்க மோதல்களால் போராளிகளும்
முகமூடியாய் நிறம்மாறிய அவலம்
கட்டப்பொம்மன்களை காட்டிக் கொடுக்கும்
எட்டப்பர்களாய் மாறிய துரோகம்

இறைவனோடு உம்மை நிகராக்கிய தனி மனித
ஆன்மீகக் கிளர்ச்சியோ அகிம்சைப் போராட்டம்
தமிழ் ஈழ அரசுக்கான இளைஞர்களின்
ஆயுதக் கிளர்ச்சியோ எம் விடுதலைப் போராட்டம்

ஆயுதபாணிகளான வானவர் சேனையின் மத்தியில்
நிராயுதபாணியான நீர் ஒரு அகிம்சாவாதி
நிராயுதபாணிகளான அப்பாவித் தமிழர் மத்தியில்
ஆயுதபாணிகளான நாங்களோ பயங்கரவாதி

மடிந்தபின்- மண்ணில் உமக்கு கல்லறை
உயிர் பிரிந்தபின்-எரியும் டயர்களோ எமது சிதை
மனித மனங்களில் நினைவாய் மலரும்போது
இறந்த எமக்கும் உயிர்ப்புண்டே!

வாழ்வும் வழியும், உண்மையுமாய் நீயிருக்க
ஆயுதமும்,அழிவும், பொய்யும் பொன்மானாய் எம்மை ஈர்க்க
சீதையாய், இராமனாய் ஆயுதப் போராட்ட மாயையில்
சிக்குண்டே அலைக்கழிந்தோம், சீரழிந்தோம்
உலகெங்கும்அகதிகளாய்ப் புலம்பெயர்ந்தோம்
காடான எம் தேசத்திற்காய் கண்ணீரில் நீராடுகின்றோம்

நடைப் பிணமாய் வாழ்ந்த எனக்கு
உனையழித்தே உயிரளித்தாய்
சத்தியத்திற்காய் துன்புறும் மனிதர்கள் எல்லாம்
துயருறும் இயேசுவே என எண்பித்தாய்

மாண்பிழந்து மனிதம் மரிக்கும்போதெல்லாம் உயிர்கொடுக்க
நீ பிறப்பெடுத்தாய், உன் உயிராலும், உதிரத்தாலும்
மனிதத்தை மீட்டு அவர்களுக்கு உயிர்கொடுத்தாய்

இறைமகனே, இயேசுவே உருகிக் கரையும் விழிகளோடும்
நொருங்கிய உள்ளத்தோடும் இறைஞ்சுகின்றேன்
“அமைதி கொடு.”

யுத்தம் அழிவைதான் தரும்-ஆக்கத்தை அல்ல
உறவுகளின் பிரிவைத்தான் தரும் ஒற்றுமையை அல்ல-
தீராப் பகைமை ஓயாது-சமாதானமோ நிலையானது

இறைமகனே புன்னகையை கொள்ளையிட்டு-ஓயாத
கண்ணீரை விட்டுச் செல்லும் போரை நிறுத்திவிடு-
ஏங்கும் அமைதியை இதயங்களில் வாழவிட்டு
அறம் நிலைக்க உள்ளங்களில் இறையரசை நிலைநிறுத்து
எனெனில்
வாழ்வும், வழியும், உண்மையும் நீயே

இலட்சியவாதிகளின் வாழ்வு கல்வாரிப் பயணமானது?
இலட்சியங்களின் நிறைவும் மரணத்திலானது?

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-11-07-2023*

# கிறிஸ்மஸ்

---

**"உன்னதங்களில்-இறைவனுக்கு மகிமையும்**
**பூவுலகில் நன்மனத்தவர்க்கு அமைதியும் உரித்தாகும் நாளே"**
**இயேசு பிறக்கும் நன் நாள்**

இல்லங்களும், சத்திரங்களும், இடமில்லை என்று கதவடைக்க
இறைவனோ தொழுவத்தை பிறப்பிடமாக்கினார்
சீவனத்தொட்டியில் ஜீவிய அப்பமானவர்-இறைவன்
விடுவிக்கிறார் எனப் பொருள்படும் இயேசு நாமம் சூடினார்

பொன்னோ, மன்னரெனக் காட்ட-தூபமோ
உத்தமகுரு எனப் போற்ற, வெள்ளைப்போளமோ
மீட்பளிக்கும் மரணத்தை சுட்ட-ஞானியர் மூவர்
காணிக்கை ஈந்து தொழுது வணங்கினார்

ஞானிகளுக்கு வான் நட்சத்திரம் வழிகாட்ட
எளிய மேய்பர்களுக்கு-வானதூதர்கள் நற்சேதி சொல்ல
அமைதியின் தேவனாய் அவர் பிறப்பு
இம்மானுவேல்- கடவள் நம்மோடு அவர் வாழ்வு

கசையால் வதைத்து, முள்முடி சூட்டி, செந்நிற ஆடை
போர்த்து, வாழ்க அரசே! எனக் கேலி செய்தார்,
சிலுவையில் யூதர்களின் அரசர் எனப் பிரகடனம் செய்தவர்
"இறைமகனானால் இறங்கி வா" என ஏளனம் செய்தார்.

காலம் நித்தியத்தை சந்தித்த அடையாளம் சிலுவை
வாதையின் உச்சத்திலும் வதைப்போரை மன்னிக்க
தந்தையே தாம் செய்வது இன்னதென இவர்கள'அறியார்
இவர்களை மன்னியும் மன்னிப்பை இரஞ்சிய மாபுருஷர்

தாம் இறைமகன் என்ற உண்மையை அவர் எடுத்துரைத்தார்.
நிராகரித்த மதமும், மாச்சரியமும் அவரை நிந்தித்து
கொலை செய்திட, சத்தியத்திற்கு சாட்சிமாய் அவர் இறப்பு
கல்லறை இல்லாத நாடோடிக்கு-இரவல் கல்லறை
காலம் கொள்ளாதவரை கல்லறையும் கொள்ளுமோ?
மூன்றாம் நாள் அவர் உயிர்ப்பு

இதயங்களில் வாழ வந்தவருக்கு மானுடம் இடமில்லை என்றது
அவரில்லாத உள்ளங்களிலும், உலகிலும் இன்றும் அமைதியில்லை.
அமைதி நன்மனத்தவருக்கே என்றும் உண்மையானது

தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
நல்மனத்தவருக்கே இறை அமைதி
இறை அமைதியே இயேசுவின் பெருவரம்.

ஏரோது நோயுற்று மாள, பிலாத்துவும், கைபாஸும்
பின்னாளில் தற்கொலை புரிந்திட
சத்தியத்தை கொன்ற மனங்களுக்குச் சாந்தியில்லை
நல்மனத்தவருக்கோ உலகில் அமைதி

தம் ஒரே பேறான மகனை ஈந்து-உலகிற்கு
இறைவன் தம் பேரன்பைக் காட்டினார்.
தூய உணர்வு நிலைக்கு மரணமில்லை
என்றும் இருப்பாய் சுத்த சைதன்யம்

மானுட அவதாரம் எடுத்து நம்மிடையே குடிகொண்டாா
பசி, துக்கம், வேதனை, வலி, கண்ணீர் அவர் வாழ்வில்
கலங்கியழுதார், கோபமுற்றார்-மனம் நொந்து
சிலுவையில் தந்தையைக் கூவியழைத்தார்.

இறைவன் அவரை மகிமைப்படுத்தினார்.
மரணம் கடந்த மாபுருஷராய் உயிர்த்தார்
அன்பு, உண்மையை வாழ்வாக்கி-வாழ்வால்
இறைவனை தொழுவோர் அவரைக் காண்பர்.
உண்மையே இறைவன்-அன்பே அவர் வடிவம்.

“வழியும், உண்மையும், வாழ்வும் நானே” அவர் வாழ்க்கை-
தந்தையின் சித்தத்திற்கு முழுமையாய் அர்ப்பணித்து
சிலுவை மரணத்தை ஏற்கும் அளவிற்கு தம்மைத் தாழ்த்தினார்.
இறைவனோ அவரை உயர்த்தி மானுடர் மீட்பராய்ப் போற்றினார்

மறுவருகைக்காய் காத்திருந்த உலகம்-ஆண்டுகள் இரண்டாயிரம் கடந்திட
அவரை மறந்துபோனது, சாரமற்ற உப்பாய், சடங்காய், வருடந்தோறும்
கொண்டாடி மகிழும் விழாவாய் கிறிஸ்து பிறப்பு மாறிப்போனது
அமைதி இழந்த உலகில் ஓயாத யுத்தம், ஆறாய் ஓடும் இரத்தம்

அமைதியின் தேவனாய் அவர் அவதாரம்-
அவர் அருளும் சமாதானமோ இறையன்பின் ஆதாரம்
என்னே உலகின் பரிதாபம்!

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-12-07-2023*

# ஏதேன் தோட்டம்

அந்திவானம், கதிரவன் அள்ளிப்பொழிந்த வண்ணக்கதிர்களால்
நாணிச்சிவந்திட, ஏதேன் தோப்பும் வண்ண மலர்களால் வாசம் வீசிட,
பூந்தென்றலில் ஆடிடும் பூவினங்கள், புதுமலரில் தேனருந்தி
போதையால் சிந்துபாடும் வண்டினங்கள்

கனிகள் சுமந்து களிப்புற்ற பழமரங்கள், கனிந்து
மண்ணை வளமாக்கி கடல் நோக்கி ஓடிடும் நதியினங்கள்
பசும்புல்வெளிகளில் உலாப்போகும் விலங்கினங்கள்
எங்கும் பேரானந்தப் பரவசங்கள்

வாரிக்கொள் என்னை வரிந்து கட்டிக்கொள்
வாசசந்தனமாய் பூசிக்கொள், பூமாலையாய் சூடிக்கொள்
சக்கி முக்கி கல்லாய் உரசிக் கொள் -காதல் தீ பற்றிட
கண்ணாளா காமக் குளிர் காய்ந்து கொள்

வீணையாய் மீட்டிகொள், மோகன ராகத்தில் காதல் சொல்
பேரழகே பெண்ணாகி வரும் ஏவாள் கண்டு இன்புற்றான்,
அழகைத் தழுவி, செவ்விதழ் தேன் பருகி போதையில்
காதல் வேள்வி செய்ய ஆவல் கொண்டான் ஆணழகன்

என் நெஞ்சுக்குள் முப்பொழுதும் பெய்யும் தேன்மழையோ
என் சுவாசத்தை நித்தம் நிறைக்கும் பூங்காற்றோ
என் உணர்வுக்கு உயிர் கொடுக்கும் பேரின்ப உணர்வோ?
மனம் கவிபாட, மையலில் தன்னை மறந்தான் ஆதாம்

கண்டதும் விழிகளில் காதல் தேனூறும்-நெஞ்சிலோ-
நேசம் புதுப்புனலாய் பொங்கிடும், உடலும், மனமும்
இவளைத் தழுவ ஏங்கிடும், உயிரோ நிரோடை கண்ட
கலைமானாய் துள்ளிட என் பெண்மானாய் இவள்
கவிதை தானாய் வந்திட என் தனிமைத்துயர் நீங்கிடும்

என் என்பின் என்பானவள், என் சதையின் சதையானவள்
இறைவன் ஈந்த அன்புத்துணையாள்-நெஞ்சம்
காதல் பண்ணிசைக்க நினைவோ -சோடிகிளிகளாய்
காதலாகி கரைந்து வானில் பறக்க தன்னிலை மறந்த காதலர்

சாலை வழியே வந்த ‘‘மதகுருவும்’’ தம்மை மறந்து நிற்கும்
காதலரைக் கண்டான், காதலில் கரைந்து அத்வைத நிலையில்
அர்தநாரிஸ்வராய் நின்றவரைக் கண்டு கோபம் கொண்டே
‘‘ சமயத்தை’’ எடுத்தரைத்து காதலைப் பழித்துச் சென்றார்

பின் வந்த “மனித உரிமை காவலரும்”
உணவின்றி-உடையின்றி- வாழ உறைவிடமின்றி
காதல் செய்யும் மானுடத்தின் காவலர் யாரோ?
மனித உரிமை மீறலின் முதல்வன் இவனோ
குற்றம் கண்டே குறை சொல்லிப் போனார்

சட்டம் வந்தது-சம்பிரதாயம் வந்தது ஒழுக்கம் எங்கே?
ஒன’றாய் கூடி மகிழ உரிமை எங்கே
சட்டத்தில் குற்றம் இது, சமூகத்தில் ஒழுக்ககேடு இது
குறைகண்டு கொதித்து வசைபாடியது

மதமும், மனித உரிமையும், மானுட ஒழுக்கமும் குறை சொல்ல
இறையன்பில் நிறை கண்ட காதல் ஜோடி இன்புற்ற மகிழ
ஆண்டவன் சந்நிதியில் -மூடிட ஆடை எதற்கு?-மறைத்திட
காதலில் என்ன பாவம் இருக்கு?

பூரண சரணாகதியே இராஜயோகம்
இறை வார்த்தையே தேவாமிர்தம் என வாழ்பவர்க்கு
உயிர் வாழ-வேறு உணவு எதற்கு?

ஏதேன் தோட்டத்தின் -இன்பரகசியம் இது
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
எளிய மனத்தவருக்கே இறையரசு

மனம் கழிந்தவர், பசிக்கும்போது உண்டார்
தூக்கம் வந்தபோது உறங்கினார்-வாழ்வே
ஸா ஸென்னாக, இயற்கையோடு இன்புற்றவர்
வாழ்வோ ஏதேன் தோப்பு
அன்புதான் இன்பம், அதுவே மோட்சம்

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-13-07-2023*

# ஈகை

---

ஒட்டிய வயிறு-நீர் வற்றிய குளத்தை சுட்ட
ஒளி இழந்த விழிகள் இருளே உலகு எனப் பறைசாற்ற
உருக்குலைந்த தேகம் வறுமையின் கொடுமை சொல்ல
வலுவிழந்த இறைமகனும் வயிற்றுப் பசிக்காய் கையேந்திட
வசதிபடைத்தோர் மூடமானார்-இருப்பதை
பகிர்ந்து மகிழ மனம் இல்லாத ஏழையானார்.

# இரசனை

கூரையை பிரித்தேன்-அழகு நிலாவை  இரசிக்க
குடையை எறிந்தேன் தேன் மழையில் குளிக்க
மனதைக் கழித்தேன் உள்ளொளி காண
என்னுள்ளோ ஞான புத்தனானேன்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-13-07-2023

# ஏக்கம்

---



உன்னை எண்ணி நெஞ்சம் பனியாய்க் கரைய
ஊனும், என்பும் மெழுகாய் உருக
ஆனந்தக் கண்ணீர் பெருகி அன்பால் இதயம் பொங்கி
அப்பா, தந்தாய் எனத் துதிக்கின்றேன்



என் உயிர்க்காற்றும் , என்னுள் ஓடும் குருதியும்,
துடிக்கும் இதயமுமாய் நீ, மண்ணோடு என்னைப் பிணைக்கும்
புவியீர்ப்பாய், என் மனதோடு கலந்த மாதா, பிதா,
குரு உறவுமாய் என் தெய்வம் நீயே ,

வாழ்வும் தவமாக உன் அன்பே வரமாக
உன்னைச் சரணடைந்தேன்-ஐயா
என்னை ஆட்கொண்டு அருள் புரிவாய் அப்பா

உருகிக் கரைந்து-உன் நாமம் ஓதி மகிழ
உள்ளமும் வெண்பனியாய் கரைந்தோட
ஆனந்தக் கண்ணீர் பெருகிட காய்ந்த உள்ளத்தில்
கருணை வெள்ளமே அன்பு மழை பொழிவாய்.



**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-17.06.2023*

# எல்லாம் நின் செயல்

---

என்னால் ஆவது ஏதுமில்லை
எல்லாம் நின் செயலே, உன் அருளே
முன் செய்த வினைக்கும்,
பின் செய்த பிழைக்கும்-கழுவாய் செய்ய
சிலுவையில் மரித்ததென்ன-என்
ஏழ் பிறப்பும் அறுத்ததென்ன?

ஒரு போதும் உன்னை மறவாது-எப்போதும்
உனக்காய்த் துடிக்கும் இதயம் அருள்வாய்,
உண்மையிலும் அன்பிலும் தொழுது விழிப்புணர்வில்
மலர்ந்திட ,கருணை செய்வாய் என் பெருமானே

என்னைத் துறந்து உன்னால் இன்புற்றேன்-
தேன்மலரை மொய்க்கும் வண்டாய். உன்னைத் தொழுதே
பாவி நான் பண்பட்டேன்
நின் கருணையைப் பாடி மகிழ்வுற்றேன்

என் தெய்வமே நான் உன்னை மறந்தாலும்
ஒரு போதும், தந்தையே என்னை மறவாதே
உன் பிள்ளை நான் எனும் உண்மையை- நெஞ்சே நீ
மறவாதே, தந்தையைத் துதிக்க மறவாதே

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-24-5-2023

# என் தந்தை

---

என்னை நான் அறியாதபோது, நாம, ரூபமாய்.
“நான்” எனும் உணர்வாய்-என்னை
நான் வெளிக்காட்டியபோது
இறைவன் நம் தந்தை நாம் ஒரு குடும்பம்
நீ என் சகோதரன் என்றார் இயேசு

ஆணவ மனம் கழிந்த நிலையே சுத்த சைதன்யம்
ஏழையல்ல உன்னுள் இருப்பதோ இறையரசு
பரி பூரண சரணாகதியே அதனைச் சுவீகரிக்கும் வழி
வாழ்வாலும், வார்த்தையாலும் கற்றுத் தந்தார்

கணந்தோறும் வாழ், ஊன் வளர்க்கும் உணவிலும்
ஆன்மா நீ என அனுபூதியில் அறிந்திட,
இறை வார்த்தையை உணவாக்கு, வாழ்வாக்கு
எதிரியையும் அன்பு செய்து, அன்பினால் இன்புறு

ஆணவமே சோதனை-விழிப்பாயிரு
ஆசையே மனம் சிருஷ்டிக்கும் தீமை
காமத்தையும் கடந்து போ-கடவுளாகி
இருப்பாய் மாறி இன்புறு -இருப்பது சூனியமே
எல்லாம் சச்சித்தானந்தமே அனுபூதியில் அறிவாய்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-13-07-2023

# இன்றைய நத்தார்

---

இதயங்கள் கல்லாய், முள்ளாய் மாறிட்ட காலத்தே
இல்லங்களும், சத்திரங்களும் இடமில்லை எனசட சொல்லி
கதவைச் சாத்திட, தொழுவமே-உன் பிறப்பிடமானது.
ஆடிடத் தொட்டிலின்றிப் பிறந்து, அடங்கிடக் கல்லறையின்றி மரித்த
நாடோடிப் போதகன் வாழ்வு அதிசயமானது

இடமில்லை என ஒதுக்கிய உலகு, இன்று உம் பிறந்த நாளை
பெருவிழாவாய் கொண்டாடிட, மானுடத்தில் மனமாற்றமில்லை,
பிறந்த நாளும் வர்தக விடுமுறை நாளாய் மாறிட
வெற்றுக் கொண்டாட்டங்களுக்குப் பஞ்சமில்லை-
அங்காடிகளில் ஆரவாரங்களுக்கும் குறைவில்லை

யுத்தமும், ஏழ்மையும், கொரோனாவும் வருத்திட
அகதி, அநாதையான ஏழைகளின் வாழ்வு சாபமானது
செல்வர் விருந்துண்டு களிக்க வாழ்வு வரமானது
ஆயுத விற்பனை உலக சாதனையானது

உன்னதங்களில் இறைவனுக்கு மகிமையும்
உலகில்-நல்மனத்தவருக்கு அமைதியும்
கிட்டும் நாள்தான் கிறிஸ்து பிறக்கும் நாள்

உள மாற்றத்தின் அழைப்பு செல்லாக் காசாகிட
உம் பிறப்பும் வெற்றுக் கொண்டாட்டமாய் மாறிட
உப்பும் சாரமிழந்திட-விளக்கும் ஒளியிழந்திட
நடைப்பிணமான வாழ்வில் இருளின் ஆட்சி

அச்சத்தில் வாழும் அகதிகளின் இதயத்தில்-வானவரோடு
சேர்ந்திசைக்க கீதமில்லை-அகதியாய் பிறந்து,
அநாதையாய் மடியும் இயேசுவின் இரண்டாம் வருகையை
யாரும் அறியவில்லை, நட்சத்திரமோ, ஞானியரோ மொழியவில்லை
அன்பு, கருணையால் புரிந்திட, மனங்களோ கற்பாறையான நிலைமை?

சத்தியத்திற்குச் சான்றான உம் அகக் கிளாச்சி,
வாதைகளால் உன் மேனியை சிவப்பாக்கிட
"செஞ்சட்டைகாரானாய் உன் மலர்ச்சி
உன் வாழ்வும் போதனையும் அன்பின் புரட்சி
மதமோ.அபினியும், போதையுமான இகழ்ச்சி

***இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க***
***எல்லாப் புகழும் இறைவனுக்கே***
*Pax Ravichandra-13-07-2023*

# எண்ணங்கள்

---

அறிவு கடந்த இறைவனும் அறிவுக்கனியை உண்ண
ஆதிப்பெற்றோருக்குத் தடைவிதித்திட-இருமை கடந்து
உண்மையைப் அனுபூதியில் அறிய-ஆசை காட்டி
அறிவுப் புரட்சியை தூண்டிய ஆசான் சாத்தான்?

மனிதன் கடவுளாய் மாறிட சாத்தான் விடுத்த அழைப்பு
பகுத்தறிவுப் புரட்சி-மனிதன் கடவுளாய் மாறிட
இயேசுவின் வாழ்வோ பரிபூரண சரணாகதி

உண்மையே உங்களுக்கு விடுதலையளிக்கும்-
உண்மையை, அன்பை வாழ்வாக்கி, வாழ்வினால்
இறைவனை தொழுங்கள் இயேசுவின் அறை கூவல்
செவிடன் காதல் ஊதிய சங்கானது

கடவுள் இறந்து விட்டார் சிந்தனையாளன் நீட்ஸே கூவினான்
அபினியும் போதையுமாய் மதம் கார்ல் மாக்ஸ் சாடினார்

கலிலியோ கலீலீ கொபர் நிகஸ், புருனே அறிவுக்கு விருந்தாக
பாப்பரசரும், திருச்சபையும், அறியாமைக்குச் சான்றாக
மார்டின் லூதர் உண்மைக்கு சான்றாக
வழுவா வரம் பொய்மைக்குச் சான்றான வரலாறு

சத்திய தேடலில் ஞான வழியில் சித்தார்தன் புத்தரானார்
அன்பு வழியில் இயேசு கிறிஸ்துவானார்-மகாயோகி
கண்ணனோ பற்றற்று யுத்தத்தில் பங்கேற்றான்.

கொல்லாமையைப் போதித்த சமண, பௌத்த துறவிகளைக்
கொன்று குவித்தவையும் மதங்கள், சிலுவைப் போர்களால்,
மதப் பயங்கரவாதத்தால் அமைதியை அச்சுறுத்துபவையும் மதங்கள்

புதுமை என்ற ஏதுமில்லை, மெய்யறிவே பெரும் புதுமை
மதம் புரியும் புதுமை எல்லாம், சில்லறையும், சித்துமாயிட
சிந்தை மழுங்கிய மந்தைகளோ பக்தர்களான அவலம்
சத்தியம்தான் தெய்வம், அன்புதான் சிவம்
அனுபூதியில் அறியாத மாயமோ பெருந்துயரம்

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-13-07-2023

# இறையரசு

மன்னரும், அடிமையும், உரிமைக் குடிமக்களும்
மடிந்து பிடி சாம்பலாகி மண்ணோடு மண்ணாய்க் கலந்தார்,
புத்த நிலையடைந்து கௌதமரும்
பரிநிர்வாணமடைந்து பிறப்பறுத்தார்

மனுமகனும் மரித்து உயிர்த்தே-மரணத்தை
கடந்து இறைமகனாய் வான் எழுந்தார்.

மனமே காயம் விழுமுன், உயிர் காற்றொடுங்கி-
இதயத் துடிப்படங்கி, வெள்ளிக் கயிறு அறுமுன்
நிலை வாழ்வைத் தேடு- இறையரசை நாடு

எல்லாம் நம்முள்ளே, நாமும் அதுவே
நாமே சச்சித் ஆனந்தம்- வாழ்வைக் கொண்டாடு

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
*Pax Ravichandra-25-5-2023*

# இறைமகன்

---

அங்கம் துளைத்த ஆணிகளும்-ஐயன்
சிரசில் சூடிய முள்முடியும்
பொன்மேனி புண்ணாக வதைத்த கசைகளும்
செந்தோளை வாட்டிய பாரச் சிலுவையும் சொல்லின
மனுமகன் பட்ட கொடிய பாடுகளை

புண்ணான பொன்மேனி சிலுவையில் தொங்கி நிற்க
அன்னையின் கண்ணீர் கங்கையாய்ப் பெருக்கெடுக்க
தந்தையும், நானும் உள்ளுணர்வில் ஒன்றென்ற சத்தியம்
உண்மைக்குச் சாட்சிமாய் உயிர் ஈந்த நித்தியன்

அன்னையாய் தந்தையாய் என்னை அன்பு செய்த
தெய்வமே, தூயவர் உம்மைத் தொழுதலும் பணிந்து
உம் வார்த்தையை வாழ்வாக்குவதல் என் கடன்

## நிலையாமை

கூடவரும் நிழல் கூட-வெயிலிற்கு குடையாகாது,
தேடிச்சேர்த்த செல்வமும் போன உயிரை வாங்கித் தராது
வந்துபோகும் சுவாசக்காற்றும் -என்றும்
நம்மோடு வாசம் செய்யாது
வாழ்வு முடியுமுன் காயம் உதிருமுன்-மனமே
மாதவனைத் தேடி- மாதவம் செய்.

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-13-07-2023

# இறைவன் என் தந்தை





உன்னை எண்ணும்போதெல்லாம்-
என் நெஞ்சுக்குள் பொங்கும் தேன்சுனை
உன் புகழை எழுதும் போதெல்லாம்
என் எழுத்தில் கவிதை மழை

உன்னோடு பேசும்போதெல்லாம்-துதிபாடும் நிலை
நன்றி நிறைந்த நெஞ்சம் நெகிழ
வாழ்வே வழிபாடான நிலை

எங்கும் உன்னைத் தேடியலைந்தேன்
விண்ணிலும் மண்ணிலும் தேடிக் களைத்தேன்
என்னுள்ளே உன்னைக் கண்டு மகிழ்ந்தேன்
என் இருப்பே நீயாக, சும்மா இருந்து சுகம் கண்டேன்.

மனம் கழிந்திட உன் தரிசனம்
ஆணவ மனமே திரையான அவலட்சணம்-
மனம் கழிந்திட-நானே நீயாகும் நிதரிசனம்
அஹம் பிரம்மஸ்மி என்றே ஆர்ப்பரிக்கும் ஆனந்தம்

எங்கும் நீயே- எல்லாமும் நீயே
இருப்பாய் நீயே-விழிப்புணர்வாய் நீயே
விருந்தும் நீ-அருமருந்தம் நீ, அமுதும்
ஆலகாலமும் கடந்த அரும்பொருள் நீ

ஆணவ மனம் கழிந்தால் ஆனந்த அமைதி
ஆண்டவன் சந்நிதியோ நம் பெருநிதி
இறையரசு நம்முள்ளே-என்னையாளும்
இறைவா என்றும் நானோ உன் பிள்ளை

உன்னோடு பேசும்போதெல்லாம் துதிபாடும் நிலை
நன்றி நிறைந்த நெஞ்சம் நாளும் உன்னை துதிக்க
வாழ்வே வழிபாடான நிலை

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-24-08-2023

# இறைவன்

---

அன்பினால் அறியப்பட வேண்டிய ஏகன் இறைவனை
நம்பச் சொல்லும் மதங்கள் -அண்ணகன் செய்த
திருமணத்தில் அன்பின் மணம் இல்லை, அனுபூதியில்
வாழ்ந்தறியும் உண்மையே இறைவன் சவாலான நிலை

அச்சமே நம்பிக்கையின் ஆணிவேர்-உண்மை
அன்பு-நம்பிக்கை என்றுமே சந்திக்காத வாழ்வில்
இறைவனுக்கு ஆயிரம் நாமங்கள்
பிரமம்மத்திற்கு நிர்க்குண, சகுண வடிவங்கள்

மெய்யில் நீறு, கழுத்தில் சிலுவை, மழித்த சிரசு-
சீவராடை, தொப்பி- நீண்ட தாடி-கையில் காப்பு-
சிரைக்காத முடி மறைத்த தலைப்பாகை

மதங்களாய் பிரிந்த மதவாதிகளால்
அன்பு அறியப்படவில்லை-நம்பிக்கை வளர்த்தவரால்-
மதவாதத்தை ஒழிக்க முடியவில்லை
மெய்யறிவு பெறமுடியவில்லை

கடவுள் ஒரு தேடல்-வாழ்வு ஒரு வெகுமதி
தேடுங்கள் கண்டடைய- தேடுபவர் நம்முள்ளே
வாழ்வு நம் கையில் கட உள்ளே-கடவுள் நம்முள்ளே

***சத்தியமோ தர்சனம்-*அனுபூதியில் *அறியும் ஆனந்தம்***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-25-5-2023

# இறைவா

நெஞ்சம் கோயிலாக-நினைவுகளோ வண்ண மலர்களாக
துதியே தூபமாக, கண்ணீர் மணிகளோ சுடர்களாக-ஐயனே
அறிவுக்கெட்டா அன்பே, பரம்பொருளே
சத் சித் ஆனந்தமே என்னையும்
ஆட்கொண்டு அருள்புரிவாய் அப்பா

# துறவு

குயில்களும் கூடுகட்ட மறுத்தன
குடும்பம் சுமையென்பதால்? கனிகளும்
இலைகளும் முதுமையில் காவியுடுத்தன
வாழ்வே மாயை என்பதால்?

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-13-07-2023

# இறையரசு

---

அந்தி வானில் கதிர் போடும் வண்ணக்கோலங்கள்
கண்ணையும், கருத்தையும் கவர்ந்திட, ஆடி அசைந்து மேயும்
மந்தைகளின் மணியோசை, இன்னிசையாய் மனதை நெருடிட
கண்டு வியந்திட, மனம் மலைத்திட எரந்தும் எரியாத முட்செடி





ஓரேப் மலையடிவாரத்தில் எரிந்தும் தீயாத எரியும் முட்செடியின்
அதிசயக் கண்காட்சி, கண்ட அதிசயம் வியப்பைத் தூண்டிட
விளக்கமாய்க் கற்ற கல்விக்கு விளங்காத புதிராய் மாறிட
விடையறிந்து ஐயம் தெளிந்திட நெருங்கினார்-மோசே

அருகில் சென்றவருக்கு இடியாய் முழங்கிய குரல்
“ ***அருகே வராதே-நின் பாதரட்சைகளை கழற்று***
***நீ நிற்குமிடம் பரிசுத்த இடம்***” -அஞ்சி நடுங்கியவர்
பாதணிகளை கழற்றிப் பணிந்தார்



“துன்புறும் என் மக்கள் இஸ்ராயேலரை விடுவிக்க
என் தூதன் நீ- எகிப்திற்கு பறப்படு”
ஆணைக்கு பணிந்த மனம்-இறை
அற்புதங்களால் விடுதலைப் பெற்ற யூத இனம்

அச்சமும், வியப்பும் ஆட்கொள்ள-என்
மக்கள் உம்மை அறிந்திட-என்னை நம்பிட
நான் உரைத்திட-இறைவா உம் பெயரென்ன ?
ஆண்டவரைப் பணிந்தே வினவினார் மோஸே

“***இருப்பவர் நாமே***” இடியாய் ஒலித்த ஒலி-
அனைத்தின் இருப்பாய் நாமே என்ற தொனி

உயிர் உருகி, மெய் சிலிர்க்க, உத்தமர் நாமம்
ஓதி மகிழ்ந்தார்
“***இருப்பவர் நாமே***” இருப்பே இறைவன்
அறிந்தவர் மகிழ்ந்தார்
ஆதி சிவத்தை மனதாரத் தொழுதார்

பாரோவின் புதல்வனாய் பல்கலையும் கற்றறிருந்தவருக்கு
இறை நாமத்தின் புதிய பரிமாணம் தெளிவாகிட
நாமே அது என்ற உண்மை-வியப்பளித்திட
அஹம் பிரம்மஸ்மி நிதரிசனமானது.

அடிமைகளாயிருந்த யூதர்களை விடுவித்து
ஆண்டவன் கட்டளைகளைக் கற்பித்து-
இறை மக்களாய் உருமாறிட
நாற்பதாண்டு வழி நடத்திய தலைவன்



பாலும் தேனும் பொங்கி ஓடும்
வாக்களிக்கப்பட்ட பூமியை சுதந்தரிக்க
எபிரேயர் பயணம்-பார்த்து மகிழ்ந்த
நெஞ்சில் அகப்பயணம்



நிறைந்த நெஞ்சம் களிப்புற
நீங்கிச் செல்லும் தம் இனம் கண்டு
நெஞ்சம் நெகிழ்வுற-தம் பணி
நிறைவுற்றதென்று மகிழ்வுற்ற மனிதர்



தாழ்ச்சியும், சாந்தமும் நிறைந்த மாமனிதர்
தன்னைத் தாழ்த்தி மண்டியிட்டு கடவுளை புகழ
கண்ணீர் கசிய, கை பற்றிய கோல் தள்ளாட
பிரிவுத்துயர் தாங்காது நெகிழ்ந்த இதயம்

இறை ஈந்த தண்டனையை ஏற்ற எளிய மகன்
யூத மதத்தின் -எபிரேய இனத்தின் நிறுவனராய்
இறை உருமாற்றிய பெரு மனிதன்
இறைவனைப் போற்றி மகிழ்ந்த புனிதன்



பாலும் தேனுமான அமைதி உள்ளத்தில் பொங்கிட
பாலையான மனம் நந்தவனமாய்ப் பூத்துக் குலுங்கிட
ஆணவம் கழித்த மனம் ஆனந்தத்தில் நிலைத்திட
வாக்களிக்கப்பட்ட இறையரசை தம்முள் கண்டார்
இறைவா என்னே நின் கருணை மனதாரப் புகழ்ந்தார்

வாக்களிக்கப்பட்ட நாடு தேடிய யாத்திரீகர் மத்தியில்
தனக்குள்ளே தீர்த்த யாத்திரை முடித்த ஆன்மீகப் பயணி-
***மோஸே ஒருவரே-ஆணவம் கழித்த தூய மனமே,***
***விழிப்புணர்வே இறையரசு, வாக்களிக்கப்பட்ட*** பூமி

***நிலம் தேடும் மனிதர் நடுவே***
***நிலையானதைத் தேடி , சத்தியத்தை கண்ட***
***அதிசய மனிதர் மோசே***
எளிய மனத்தவருக்கே இறையரசு
துயா மனத்தவருக்கே சத்திய தரிசனம்-
நிதரிசனமானது



இருப்பவர் நாமே என்ற திரு நாமம் அழைப்பாக-
எல்லாம் துறந்து இறைவனுக்கே அடிமையான இளவலும்
இன்புற்றார், தனையாளும் பெருமான்
தாள் பணிந்தே புதுப்பிறப்புற்றார்

***இறையரசை தன்னுள் கண்ட இரு பிறப்பாளர்***
***நானழிந்து அதுவாகிட***
***பாலும், தேனும் பொங்கி ஓடும் விழிப்புணர்வாகிட,***
***வாக்களிக்கப்பட்ட புதிய வானம்-புதிய பூமி***
***தன்னுள்ளே என்றறிந்தவர் எவரோ?***

சக்தியும், சடமுமாய்-நெருப்பும், முட் செடியுமாய்
நிர்குண பிரம்மமும், சகுண பிரம்மமுமாய்
நாமே எனக் காட்டிட
எரியும் முட்செடியாய் இறைவன்

"இருப்பவர் நாமே "சுயத்தின் தொனியாக
ஆணவம் மறைந்திட -தூயமனதின் ஓங்கார இசையாக
சக்தியே சடமாய் ஓங்காரநாதமாய் ஒன்றாய்
கலந்து நின்றதைச் சொல்லியதே



வாக்களிக்கப்பட்ட பூமியை வாழ்வாக்கிக் கொண்டவர்
மறுவுருவான இறைமகனோடு மலையில் உரையாடி மகிழ்ந்தார்
இறையரசின் உன்னதத்தை இறைமகனின் உருமாற்றம் இயம்பிட
அகமாற்றமே உருமாற்றம் அறிந்தவர் புரிந்தார் அகமகிழ்ந்தார்

யுத்த நெருப்பும்-இரத்தச் சிவப்பும் யூத-பாலஸ்தீன மக்களைச் சுட்டெரிக்க,
வலிய யூதர் பாரோவாய் உருமாறி-பாலஸ்தீனரை அச்சுறுத்த
தீராத பகைமை தீயாய் வளர்ந்து எரிக்கும் முட்செடியாய் மாறிட
யுத்த பூமியாய்-மாறிடும் பூமி  வாக்களிக்கப்பட்ட பூமியோ?

பாலும் தேனும் ஓடும் நாடுப் பாரில் ஏதுமில்லை
ஆணவமழித்த உள்ளத்தின் ஆனந்த நிலையே அது
உள்ளுணர்வின் அதி உன்னத நிலையே இறைவன்
**சச் சித் ஆனந்தமாய் அது**

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-24-08-2023

# இரத்தல்

---

ஆலயம், கோயில், விகாரைகளில் உண்டியல்கள்,
இறைவனிடம் பக்தர்களின் வேண்டுதல்கள்
ஆலய முன்றலில் ஏழைகளின் இரத்தல்கள்
வணக்க தலங்கள் எங்கும் ஆண்டிப் பட்டாளங்கள்
தெய்வங்கள், குருக்கள், பக்தர்கள் எல்லாம்
சுரண்டலின் வேஷங்கள்?

***கொடுப்பதற்காக உயர்ந்த கைகள்***
***வாங்குவதற்காக தாழக்கூடாது***

உள்ளதை எல்லாம் விற்று ஏழைகளுக்கு கொடுத்து-பின்
என்னை பின் செல் , நிலை வாழ்வு உனதே-குரு மறைந்திட
சீடர்களோ குருவையும் மறந்தார்-உள்ளதை இழந்து
இல்லாமையை தமதாக்க வார்த்தையையும் மறுத்தார்?

எளிய மனத்தவருக்கே இறையரசு
தூய மனத்தவருக்கே சத்திய தரிசனம்
ஆணவம் கழிந்த சூனியமே பெருஞ் செல்வம்-

மதங்கள்-சுரண்டலின் வடிவங்களே-ஆண்டவன் பெயரால்
சிந்தனையை மழுங்கடிக்கும் நம்பிக்கை முடக்குவாதமே
கலிலியோ கலிலியிற்கும்-கொபர்நிகஸீக்கும் இவர்கள் கோமாளிகளே
கார்ல் மார்க்ஸீக்கோ-மதவாதிகள் போதை வஸ்து வியாபாரிகளே

***ஆன்மீகம் ஒரு அகமுகப்புரட்சி-விழிப்புணர்வின் எழுச்சி***

***கடல் மேல் நடப்பது புதுமையில்லை***
***மண்மேல் விழிப்புணர்வோடு நடப்பது***
***புதுமையிலும் புதுமை***

***உன்னை நீ அறிவதே உன் விடுதலை***
***உனக்கு நீ ஒளி என்பதே உண்மை நிலை***

**இன்பமே சூழ்க-எல்லோரும் நலமே வாழ்க**
**எல்லாப் புகழும் இறைவனுக்கே**
Pax Ravichandra-17.06.2023